வாங்க வேண்டிய நிலைமை என்றுமே இருந்து வந்தது. இதன் காரணமாக, எவ்வகையிலும் விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படாமல் குடியானவர்களுடைய வாழ்க்கை நசித்துப் போகக்கூடிய நிலைமைதான் மேலும் மேலும் ஏற்பட்டுக் கொண்டுவந்தது. இந் நிலைமையைத் தவிர்க்கக் கூட்டுறவு இயக்கம் பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே ஆரம்பிக்கப் பட்டது. ஆனால் இவ்வியக்கம் போதுமான அளவு பரவாமல் நின்றுவிட்டது. சுதந்திரம் பெற்றதற்குப் பிற்பாடு விவசாய அபிவிருத்தியில் அக்கறை கொண்ட ராஜ்ய சர்க்கார் இத் துறையில் அதிகக் கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள். ஐந்தாண்டுத் திட்டங்களிலேயும் இவ்வியக்கம் முக்கிய இடத்தைப் பெற்றது. சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு இயக்கம் பெரிய அளவில் விரிவடைந்து இருக்கின்றது என்பதைக் காண்கின்றோம். தற்போது நம் ராஜ்யத்தில் ஒவ்வொரு கிராமமும் கூட்டுறவு இயக்க வசதியைப் பெற்றிருக்கிறது. கிராமப் பகுதி மக்களில் நூற்றுக்கு 54 பேர் கூட்டுறவுச் சங்கங்களின் பலனைப் பெற்றுள்ளார்கள், கூட்டுறவு ஸ்தாபனங்களின் மூலமாக 1953-54-ல் 4 கோடி ரூபாய் குடியானவர்களுக்குக் கடனுக வழங்கப்பட்டது; இவ்வாண்டில் அது 25 கோடி ரூபாய் அளவிற்கு உயர்ந்துள்ளது. இருப்பினும் எல்லாக் குடியானவர்களுக்கும் வேண்டிய அளவு கடன் வசதியைக் கூட்டுறவுச் சங்கங்கள் இன்னும் செய்து கொடுக்கக்கூடிய நிலைமை ஏற்படவில்லை. மூன்ருவது திட்டக் காலத்தில் 45 கோடி ரூபாய் அளவிற்குக் கடன் வழங்கவும், கிராமப் பகுதி மக்களில் 85 சத விகிதத்தினரைக் கூட்டுறவு இயக்கத்தின்கீழ்க் கொண்டு வரவும் திட்டமிட்டுள்ளோம்.

சில அபிவிருத்தி வட்டாரங்களைத் தேர்ந்தெடுத்து, அங்குள்ள குடியானவர்களுக்கு வேண்டிய எல்லாக் கடன் வசதிகளையும் கூட்டுறவுச் சங்கங்களின் மூலமாகவே வழங்க ஏற்பாடு செய்ய முன் வந்துள்ளது அங்கத்தினர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். இம் முழுக் கடன் உதவித் திட்டம் இப்போது 43 வட்டாரங்களில் அமுலில் இருக்கின்றது. இந்த முறையை ராஜ்யம் முழுவதற்கும் கொண்டுவருவதற்கு முயற்சி செய்யப்படும். இதன் மூலம் குடியானவர்கள் தங்களுடைய பண்ணைச் செலவுக்காக வேண்டிய கடன் வசதி முழுவதையும் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகவே பெறக்கூடிய நிலை ஏற்படும். இத் திட்டத்தை வகுப்பதில் இருக்கக்கூடிய முக்கியமான சங்கடம் சொத்துக் குறைவாக உள்ள குடியான வர்களுக்கும், குத்தகைதாரர்களாக உள்ள விவசாயிகளுக்கும் கடன் வழங்குவதில் இருக்கக்கூடிய சிக்கல்களே. இவர்களுக்குக் கடன் வழங்கினுல் கடனைத் திருப்பி வசூல் செய்வது கஷ்டம் என்ற ஒரு கருத்துப் பரவலாக உள்ளது. ஆகவே இதனுல் ஏற்படும். நஷ்டத்தை சர்க்காரும் ஏற்றுக்கொள்வதென

முடிவு செய்து, அதற்கான ஆணைகளையும் பிறப்பித்துள்ளது. இருப்பினும் சிறு குடியானவர்களுக்குக் கடன் கிடைப்பதில் இன்னும் பல சங்கடங்கள் இருப்பதாகத் தெரியவருகின்றது. இதைப் பற்றி ஒரு குழு விசாரணை நடத்தி வருகிறது. இக் குழு அறிக்கை சமர்ப்பித்த பின்னர் இதிலுள்ள சிக்கல்களை நீக்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

கூட்டுறவுச் சங்கங்கள் வெறும் கடன் வழங்கும் ஸ்தாபனங்களாக மட்டுமல்லாமல் குடியானவர்களுக்கு வேண்டிய மற்ற அடிப்படையான வசதிகளையும் செய்து கொடுக்கக்கூடிய ஸ்தாபனங்களாக அமைவதன் மூலமாகத்தான் கூட்டுறவு இயக்கம் வலிவு பெறுவதுடன் விவசாய அபிவிருத்திக்கும் சிறந்த முறையிலே பயன்பட முடியும். குடியானவர்களுக்கு வேண்டிய உரம், பூச்சி மருந்து, விவசாயக் கருவிகள் போன்றவைகளை, நியாயமான விலைக்கு வாங்கி வழங்குவதுடன், விவசாயிகள் உற்பத்தி செய்யும் பொருள்களை நல்ல விலைக்கு விற்றுக் கொடுப்பதற்கும் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் ஏற்பாடு செய்வது அவசியமாகிறது. இன்றைக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் இம் முறையில்தான், கடன் வழங்குவதுடன் மேலும், பல பணிகளை ஏற்று நடத்தக்கூடிய முறையில் விரிவு அடைந்து வருகின்றன. விற்பனைச் சங்கங்களையும், விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களையும் பெரிய அளவில் பெருக்குவதற்குத் திட்டமிட்டுள்ளோம். இரண்டாவது திட்டக் காலத்தில் 30 பிரதம விற்பனைச் சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. 243 கிடங்குகளும் கட்டப்பட்டன. மூன்றாவது திட்டக் காலத்தில் 1,000 கிடங்குகள் கட்டுவதற்கு திட்டமிட்டுள்ளோம். 1961-62-ல் 210 கிடங்குகள் கட்டுவதற்கு நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. விவசாயப் பொருள்களின் மொத்த வியாபாரம் முழுமையும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமே நடப்பதற்கான ஒரு ஏற்பாட்டைச் செய்வதன் மூலம்தான் விவசாயிகள் தாங்கள் உழைத்து விளைவித்த பொருள்களுக்கு நியாயமான விலையைப் பெற வாய்ப்பளிக்க முடியும். சென்னைக் கிடங்கு கார்ப்பொரேஷனும் அதனுடைய பணிகளை விரிவாக்கும். அதற்காக சர்க்காரும் இதனுடைய பங்குத் தொகையில் 6 லட்சம் ரூபாய் முதலீடு செய்ய நிதி ஒதுக்கியுள்ளது. கூட்டுறவுப் பண்ணைத் திட்டமும் தொடர்ந்து நடைபெறும்.

18. இன்றைய நிலையில், நம் நாட்டின் பெரும் பகுதி மக்கள், விவசாயத்தையே நம்பி வாழக்கூடிய நிலையில் இருக்கின்றனர். பொதுவாக தேசீய வருமானம் வளர்ச்சி அடைந்து வருகின்றது என்றாலும் 75 சத விகித மக்கள் விவசாயத்திலேயே ஈடுபட்டிருக்கக்கூடிய காரணத்தினாலும் மக்களுடைய எண்ணிக்கை நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போகின்ற காரணத்தினாலும் தனி மனிதனின் வருமானம் வர வரக் குறையக்கூடிய நிலைமை ஏற்பட்டு வருகின்றது. பெருந் தொழில்கள்.

[Sri C. Subramaniam] [25th February 1961

பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில் ஒரு சிறுபகுதியினரே விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கின்றனர்; மற்றப் பெரும் பகுதியினர் வேறு தொழில்களில் ஈடுபடுகின்றனர். அந் நிலையை நம் நாட்டிலும் ஏற்படுத்துவதன் மூலமாகத்தான் நாட்டிலுள்ள வறுமையைப் போக்க முடியும்; எல்லா மக்களுக்கும் நல்ல வேலை வாய்ப்பு ஏற்படச் செய்ய முடியும். ஆகவேதான் நம்முடைய திட்டங்களில் தொழில் வளர்ச்சிக்குப் பெரிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது.

தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சி, நெய்வேலி நிலக்கரித் திட்டம் வெற்றி பெறுவதையே பெரிதும் பொறுத்து இருக்கிறது. இத் திட்டம் 86 கோடி ரூபாய் அளவில் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் முக்கியப் பகுதிகள்—

(1) 35 லட்சம் டன் பழுப்பு நிலக்கரி வெட்டி எடுப்பதற்கான சுரங்க வேலைத் திட்டம்.

(2) பழுப்பு நிலக்கரியை உபயோகப்படுத்தி 2·5 லட்சம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்வது.

(3) பழுப்பு நிலக்கரியை மூலப்பொருளாகக் கொண்டு ஆண்டு ஒன்றுக்கு 1·5 லட்சம் டன் யூரியா உரம் தயாரிப்பது.

(4) 3·8 லட்சம் டன் சுட்ட நிலக்கரி அச்சுக்கள் தயார் செய்வது.

நிலக்கரியை வெட்டி எடுக்கும் சுரங்க வேலையில் 270 லட்சம் கன கெஜம் மண்ணை வெட்டி எடுத்த பிறகே பழுப்பு நிலக்கரியைக் காண முடியும். 1961-ம் ஆண்டு செப்டம்பருக்குள் இதனைச் செய்ய முடியுமென எதிர்பார்க்கிறோம்.

நெய்வேலி மின்சார உற்பத்தி நிலையத்திற்கு ரஷ்ய உதவி கிடைத்திருக்கின்றது. அதற்கான ஒரு ஒப்பந்தமும் 1957-ம் ஆண்டு நவம்பரில் ரஷ்யாவுடன் செய்யப்பட்டுள்ளது. மின்சார உற்பத்தி நிலையத்தைக் கட்டுவதற்கான வேலைகள் துரிதமாக நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. முதல் இயந்திரமூலம் மின்சார உற்பத்தி இவ்வாண்டு செப்டம்பர் மாதத்தில் ஆரம்பமாகுமென எதிர்பார்க்கலாம். 1962-ம் ஆண்டு டிசம்பருக்குள் 2·5 லட்சம் கிலோவாட் அளவு மின்சாரம் உற்பத்தி செய்ய முடியுமென எதிர்பார்க்கிறோம். உர உற்பத்திக்கான தொழிற்சாலையை இத்தாலி, மேற்கு ஜெர்மனி நாடுகளின் உதவிகொண்டு அமைக்க ஏற்பாடாகி வருகிறது. இதற்கான பணிகளும் துவங்கப்பட்டு, பல இயந்திரங்களும் வர ஆரம்பித்துவிட்டன. சுட்ட நிலக்கரி அச்சுக்கள் தயாரிப்பதற்கான தொழிற்சாலை அமைப்பிற்கு வந்துள்ள டெண்டர்கள் பரிசீலனையில் இருக்கின்றன. நிலக்கரிச் சுரங்கத்தில் நல்ல உயர்தரக் களிமண் கிடைக்க வாய்ப்பு இருக்கின்றது. இதைச் சுத்தம் செய்து பல பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உபயோகப்படுத்த முடியும். இதற்கான ஒரு தொழிற்சாலையும் கட்டப்பட்டு வருகின்றது.

25th February 1961] [Sri C. Subramaniam]

நெய்வேலித் திட்டம் முழுமைக்கும் 26,750 ஏக்கரா நிலம் ஆர்ஜிதம் செய்ய வேண்டியிருக்கிறது. இதுவரையிலும் 11,454 ஏக்கரா நிலம் ஆர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது. இதன் காரணமாக வெளியேற்றப்பட்ட மக்களுக்கு வேறு இடங்களில் வசதி செய்து கொடுக்கப்பெற்று, அவர்கள் புனர் வாழ்விற்கான உதவிகளும் அளிக்கப்பட்டு வருகின்றன. இத் திட்டத்தில் பணியாற்றும் பல்வேறு பணியாளர்களுக்கு வீடு கட்டும் திட்டமும் துரிதமாக முன்னேறி வருகின்றது. இவ்வாண்டு மார்ச் இறுதிக்குள்ளாக 5,507 கட்டிடங்கள் கட்டி முடிக்கத் திட்டமிட்டுள்ளார்கள். குடிநீர் வசதி, விளக்கு வசதிகள், பள்ளிகள், சுகாதார வைத்திய வசதிகள், கடைகள், விளையாட்டு மைதானங்கள் போன்ற பல்வேறு வசதிகளுக்கும் ஏற்பாடு செய்துள்ளார்கள். குடும்பங்களுக்கான அத்தியாவசியமான பொருள்களை நியாயமான விலைக்கு விற்கும் முறையில் கூட்டுறவு ஸ்தாபனங்களும் அமைக்கப்பட்டு இருக்கின்றன.

19. தமிழ் நாட்டில் இரும்பு உற்பத்தி செய்யும் தொழிற்சாலை இல்லாத குறை பெரும் குறையாக இருந்து வந்திருக்கின்றது. சேலம் ஜில்லாவில் இரும்புக் கனி ஏராளமாக உள்ளது; ஆயினும் அதிலே இருக்கக்கூடிய இரும்புச் சத்துக் குறைவுதான். இரும்புக் கனியை உருக்குவதற்கான நிலக்கரியும் நம் ராஜ்யத்தில் இதுவரையில் கிடைக்காது இருந்தது; தற்போது நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி கிடைக்கும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. சேலம் இரும்புக் கனியையும், நெய்வேலிப் பழுப்பு நிலக்கரியையும் கொண்டு இரும்பு உற்பத்தி செய்ய முடியுமா என்ற ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. கிழக்கு ஜெர்மன் நிபுணர்கள் இதைப்பற்றி ஒரு பூர்வாங்க அறிக்கையைத் தயாரித்துச் சமர்ப்பித்துள்ளார்கள். மேற்கு ஜெர்மனியிலிருந்தும் இத் திட்டத்திற்கு உதவ முன்வந்துள்ளார்கள். பூர்வாங்க சோதனைகள், இத் திட்டம் வெற்றி பெறுவதற்கான நம்பிக்கையை நமக்கு ஊட்டுவதாய் இருந்தாலும், இதைப்பற்றி இன்னும் பெரிய அளவில் சோதனைகள் நடத்த வேண்டிய அவசியத்தைப்பற்றி ஜெர்மன் நிபுணர்கள் வலியுறுத்தி இருக்கிறார்கள். நிலக்கரி வெட்டி எடுக்கப்பட்ட பின்புதான் அச்சோதனைகளுக்கு ஏற்பாடு செய்யமுடியும். அச்சோதனைகளின் அடிப்படையில் இரும்பு உற்பத்திச் செய்ய முடியும் என்ற முடிவு ஏற்படுமேயானால் தமிழ் நாட்டில் கட்டாயம் இரும்புத் தொழிற்சாலை அமையும் என்பதில் யாருக்கும் ஐயம் வேண்டியதில்லை. மத்திய சர்க்கார் இதற்கான திட்டங்களைப் பரிசீலிப்பதற்கு நிபுணர்கள் அடங்கிய ஒரு குழுவை நியமித்து இருக்கின்றார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் இதற்கென முதற்படியாக 25 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆகவே இரும்புத் தொழிற்சாலை அமைப்பதற்கான பூர்வாங்க

இரும்புத் தொழிற்சாலை.

[Sri C. Subramaniam] [25th February 1961

ஏற்பாடுகள் நடைபெற்றுக்கொண்டு இருந்தாலும், முடிவான சோதனைகள் நடைபெற்று, திட்டத்தை எடுத்துக்கொள்ளலாம் என்கின்ற உறுதியை நிபுணர்கள் தெரிவிக்கின்ற வரையில், நாம் பொறுமையுடன் காத்திருக்கத்தான் வேண்டும். பல கோடிக் கணக்கில் முதலீடு செய்ய வேண்டிய தொழிலை, சோதனைகள் பூர்த்தியாகாமல் எடுத்துக்கொள்வது என்பது முடியாத காரியம். இதற்கான எல்லா வேலைகளையும் துரிதமாகக் கவனிப்பதற்காக ஒரு தனி அதிகாரியையும் நாம் நியமித்திருக்கிறோம். பூர்வாங்க வேலைகளுக்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ராஜ்ய சர்க்கார் நிதியில் 75 லட்சம் ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது. சேலத்தில் உள்ள இரும்புக் கனியை வெட்டி எடுத்து அவைகளை ஜாம்ஷெட்பூருக்கும், ஜெர்மனிக்கும் சோதனைகள் நடத்துவதற்காக அனுப்ப ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கின்றன. இச் செலவுக்காக 1961-62-ம் ஆண்டு பட்ஜெட்டில் 7·5 லட்சம் ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது.

நெய்வேலித் திட்டத்திலுள்ள பல்வேறு பகுதிகள் நிறைவேற்றப்படுவதன் மூலம் நம் ராஜ்யத்திற்கு மின்சாரம், உரம், எரிபொருள்கள் போன்ற பல வசதிகள் கிடைப்பதோடு, பல புதிய உபதொழில்கள் தோன்றக்கூடிய வாய்ப்பும் ஏற்படும். அண்டை ராஜ்யங்களுக்கும் இத் திட்டத்தின் மூலமாகப் பல பலன்கள் ஏற்படலாம். மின்சார உற்பத்தியை 4 லட்சம் கிலோவாட்டாக உயர்த்துவதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதற்காக நிலக்கரியை அதிக அளவில் வெட்டி எடுப்பதற்கும் திட்டம் உருவாக்கப்பட்டுள்ளது.

காவிரி எண்ணெய்.

20. தமிழ் நாட்டில் காவிரிப் பகுதியில் எண்ணெய் இருக்கின்றதா என்பதைப் பற்றிய ஆராய்ச்சி பல அந்நிய நாட்டு நிபுணர்களால் நடத்தப்பட்டு வந்துள்ளது. 1956-ம் ஆண்டு ரஷ்ய நிபுணர்கள் அவ்விடத்தைப் பார்வையிட்டு இங்கு எண்ணெய் கிடைப்பதற்கான அறிகுறிகள் உள்ளன என்ற கருத்தை வெளியிட்டனர். இதற்காகப் பூர்வாங்க சோதனைகளை மேற்கொள்ள வேண்டுமென இந்திய அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறினர். ராஜ்ய சர்க்காரும் இதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு எடுத்துச் சொல்லி, இதற்கான சோதனைகள் 1957-58-ல் ஆரம்பமாயின. இந்தியப் புவியியல் ஆராய்ச்சிக் கழகம் இதற்கான சோதனைகளை மேற்கொண்டது. இதுவரையில் சுமார் 4,000 சதுர மைல் அளவில் சர்வே நடத்தியுள்ளார்கள். மேலும் பல பகுதிகளில் சோதனைகள் நடைபெற்று வருகின்றன. எண்ணெய் எரிவாயுக் கமிஷனும் (Oil and Natural Gas Commission) இங்கு ஒலி அலைச் சோதனைகளை நடத்த

நிபுணர்களையும் கருவிகளையும் அனுப்பியுள்ளனர். இந்தப் பூர்வாங்க சோதனைகள் இப் பகுதியில் எண்ணெய் கிடைக்கும் என்ற நம்பிக்கையை ஊட்டுகின்றன.

21. நீலகிரியில் கச்சா பிலிம் தொழிற்சாலை அமைப்பதற்காக ஊட்டிக்கு அருகாமையில் ஓர் இடம் தெரிந்தெடுக்கப்பட்டுக் கட்டிடம் கட்ட ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. முன்பு எதிர்பார்த்தது போலவே 1962-ம் ஆண்டுக்குள்ளாக இங்குக் கச்சா பிலிம் உற்பத்தியாகும் என எதிர்பார்க்கலாம். மத்திய அரசாங்கம் நிறுவப்போகும் மற்றொரு முக்கிய தொழிற்சாலை, கிண்டியில் ரண சிகிச்சைக் கருவிகள் உற்பத்திக்கானது ஆகும். இதற்கான ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. டெலிபிரிண்டர் யந்திரங்கள் செய்வதற்கான ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கும் ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. புரோட்டோ டைப் தொழிற்சாலை ஒன்று நியமிக்கும் திட்டமும் நிறைவேறி வருகிறது. ஏனை மத்திய திட்டங்கள்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கனரக மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்ய அமைக்கப்போகும் இரண்டு பெரும் தொழிற்சாலைகளில் ஒரு தொழிற்சாலை தென்னிந்தியாவில் அமையும். நம்முடைய ராஜ்யத்திலுள்ள சில இடங்களை இதற்கென அமைக்கப்பட்ட நிபுணர் குழு வந்து பரிசீலனை செய்து சென்றிருக்கிறது. இத் தொழிற்சாலை நம்முடைய ராஜ்யத்திலே ஏற்படுவதற்கான வாய்ப்புகள் உள்ளன.

பெரம்பூர் ரயில் பெட்டித் தொழிற்சாலை 1955-ம் ஆண்டு அக்டோபர் 2-ம் தேதியன்று உற்பத்தியைத் தொடங்கிற்று. வருஷம் ஒன்றுக்கு 350 பெட்டிகள் கட்டக்கூடிய அளவை ஐந்தாண்டுகளில் அடைய வேண்டுமெனத் திட்டமிட்டிருந்தார்கள். ஆனால் இந்த இலக்கை மூன்று ஆண்டுகளிலேயே அடைய முடிந்தது. தற்போது வருஷம் ஒன்றுக்கு இங்கு 600 பெட்டிகள் கட்டப்படுகின்றன. இந்த ஆண்டு முடிவிற்குள்ளாக 700 பெட்டிகள் கட்டக்கூடிய அளவிற்கு விரிவடைந்து விடும் என எதிர்பார்க்கிறோம். இதில் 7·5 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ளது. ரயில் பெட்டிகளுக்கு **furnishing**—furnishing என்று ஆங்கிலத்திலேயே போட்டிருக்கிறேன். அதற்கேற்ற பொருத்தமான தமிழ் வார்த்தையை யாராவது சொன்னால் ஏற்றுக்கொள்ளத் தயார்—வசதிகள் செய்வதற்கான ஒரு திட்டம் 3·7 கோடி ரூபாய் செலவில் அமைக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குள்ளாக இத்தொழிற்சாலை கட்டி முடிக்கப்பட்டு விடும். இதன் மூலம் பெரம்பூர் தொழிற்சாலையில் தயாராகின்ற எல்லா ரயில் பெட்டிகளும் இந்தத் தொழிற்சாலையிலேயே furnishing செய்யக்கூடிய வசதிகள் ஏற்பட்டு விடும்.

[Sri C. Subramaniam] [25th February 1961

தனியார் துறை.

22. நம் ராஜ்யத் தொழில் வளர்ச்சியில் தனியார் துறை ஒரு முக்கியப் பங்கை ஏற்றுக்கொண்டுள்ளது. பல்வகை தொழிற் சாலைகள் பெரிய அளவிலே அமைப்பதற்கான திட்டங்களைப் பல தொழிற் கம்பெனிகள் வெற்றியுடன் நிறைவேற்றி வருகின்றன.

தமிழ் நாட்டில் முதன் முதலில் ஏற்பட்ட தொழில், நூல் நூற்கும் மில்கள்தான். 1950-ம் ஆண்டில் 71 மில்கள் 17 லட்சம் கதிர்களுடனும் 7,400 தறிகளுடனும் ஏற்பட்டிருந்தன. 1956-ம் ஆண்டில் மேலும் 31 மில்கள் அமைந்து, மொத்தம் 21·7 லட்சம் கதிர்களும் 8,016 தறிகளும் இயங்கி வந்தன. அடுத்த ஐந்தாண்டுகளில் 30·6 லட்சம் அளவிற்குக் கதிர்கள் அதிகப்பட்டுள்ளன. அகில இந்தியாவிலும் 135·4 லட்சம் கதிர்களே உள்ளன. இவைகளில் 22 சதவீதத்துக்கு மேல் நம்முடைய ராஜ்யத்தில் அமைந்துள்ளன. ஆனால் தறிகள் போதுமான அளவுக்கு அதிகரிக்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் இங்கு உற்பத்தியாகும் நூலில் பெரும் பகுதி கைத்தறிக்கு உபயோகப்படுவதுதான். இருப்பினும் தறிகளை மேலும் அதிகப்படுத்துவதற்கும் முயற்சி எடுப்பது அவசியம். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மில் களில் பொருத்துவதற்காக 10,000 விசைத் தறிகளை நம் ராஜ்யத்திற்காக ஒதுக்கவேண்டுமென மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

சமீப காலத்தில் துணி உற்பத்தி செய்வதில் ஒரு புரட்சி கரமான மாறுதல் ஏற்பட்டிருக்கின்றது. இயற்கையாகக் கிடைக்கும் பஞ்சு அல்லது பட்டு இவைகளைக் கொண்டு துணி செய்வதற்குப் பதிலாக ரசாயன முறையில் செயற்கைப் பஞ்சு, செயற்கை நூல் இவைகளை உற்பத்தி செய்யும் முறைகளைக் கண்டுபிடித்துள்ளார்கள். இதன் பயனுக விவசாய நிலங்களில் பஞ்சு உற்பத்தி செய்வதற்குப் பதில் காடுகளில் வளருகின்ற மரங்களை உபயோகித்துச் செயற்கைப் பஞ்சையும், நூலையும் தயார் செய்ய முடியும். இதற்கான நிலம் பஞ்சுப் பருத்தி விளைவிக்கும் நிலத்தைப் போன்று வளம்பெற்றதாக இருக்க வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. அத்துடன் ஒரு ஏக்கரில் தயாராகின்ற பருத்தியைக் காட்டிலும் அந்த ஏக்கரில் தயாராகின்ற மரத்தைக் கொண்டு செய்யப்படும் செயற்கை நூல் பல மடங்கு அதிகமாக உள்ளது. பஞ்சுப் பற்றுக்குறை இருக்கக்கூடிய நாட்டில் இந்த நவீன முறைகளைக் கையாளுவது அவசியமாகிறது. இந்த அடிப் படையில் தென்னிந்திய விஸ்கோஸ் கார்ப்பொரேஷன் என்ற ஸ்தாபனம் கோயம்புத்தூருக்கு அருகாமையில் இதற்கென ஒரு தொழிற்சாலையை அமைத்து வருகின்றது. ஏப்ரல், மே மாதத்திலே இதிலே உற்பத்தி தொடங்குமென எதிர்பார்க் கலாம். நம் ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கக்கூடிய முக்கியமான தொழிற்சாலைகளில் இதுவும் ஒன்று.

25th February 1961] [Sri C. Subramaniam]

சேலத்தில் அலுமினியக் கனியை உபயோகித்து அலுமினியம் தயார் செய்வதற்கான திட்டம் பூர்த்தியாகிவிட்டது. சமீபத்தில் இதற்காக ஒரு கம்பெனியும் பதிவு செய்யப்பட்டு மூலதனத்திற்கான பங்குகளும் பொதுமக்களிடமிருந்து சேர்க்கப்பட்டுள்ளன. இத்தாலியிலுள்ள பிரசித்திபெற்ற மான்டிகேட்டினி என்ற கம்பெனி இதற்கு உதவ முன் வந்துள்ளது. வேலை தொடங்கி இரண்டு ஆண்டுகளுக்குள் அலுமினிய உலோக உற்பத்தி செய்ய முடியுமென எதிர் பார்க்கப்படுகிறது.

வருடம் ஒன்றுக்கு 20,000 டன் காகிதம் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலை ஒன்றை சேஷஸாயி ஸ்தாபனத்தார் கட்டிவருகின்றனர். மேலும் சிறிய அளவில் காகிதம் உற்பத்தி செய்வதற்காக ஆறு லைசென்சுகள் வழங்கப்பட்டிருக்கின்றன. சர்க்கரைத் தொழிற்சாலையில் உப பொருளாகக் கிடைக்கும் கரும்புச் சக்கைகளைக் கொண்டு காகிதக் கூழ் (pulp) செய்யக்கூடிய திட்டமும் பரிசீலனையில் இருக்கின்றது. சர்க்கரைத் தொழிற்சாலையிலே ஏற்படக்கூடிய இன்னொரு மூலப்பொருள் வெல்லக் கசடு (molasses). இதிலே இருந்து எரி சாராயம் உற்பத்தி செய்ய முடியும். வருடம் ஒன்றுக்கு 20 லட்சம் காலன் எரி சாராயம் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கு லைசென்சு வழங்கப்பட்டுள்ளது.

உரத் தொழிற்சாலைகள் பல ஏற்படுவதற்கான வாய்ப்புகளும் நம் ராஜ்யத்தில் உள்ளன. முன்பே குறிப்பிட்டபடி நெய்வேலியில் யூரியா உரம் செய்வதற்குத் தொழிற்சாலை அமைக்கப்பட்டு வருகிறது. பாரி அண்டு கம்பெனியார் அம்மோனியம் பாஸ்பேட் என்ற உரம் செய்வதற்கான ஒரு தொழிற்சாலையை அமைத்து வருகின்றனர். கோத்தாரி அண்டு சன்ஸ் தூத்துக்குடிக்குப் பக்கத்தில் அம்மோனியம் பாஸ்பேட் தயாரிப்பதற்கான ஒரு பெரும் தொழிற்சாலையை அமைக்க முன்வந்துள்ளனர். இவைகளெல்லாம் உருவாகும் பொழுது, நம் ராஜ்யத்திற்கு வேண்டிய நைட்ரஜன் உரம் போதிய அளவிற்கு உற்பத்தியாகும். பாஸ்பேட் உரமும் நம்முடைய ராஜ்யத்தில் 110,000 டன் அளவுக்கு இப்போது உற்பத்தியாகிறது. மேலும் 140,000 டன் சூபர் பாஸ்பேட் உற்பத்தி செய்வதற்காக மூன்று தொழிற்சாலைகள் சென்னை, கடலூர், கோயம்புத்தூர் ஆகிய இடங்களில் அமைக்க லைசென்சுகள் வழங்கப்பட்டுள்ளன. இந்தப் புதிய தொழிற்சாலைகளில் முழு உற்பத்தி ஏற்படும்பொழுது மொத்தம் 2·5 லட்சம் டன் சூபர்பாஸ்பேட் உரம் உற்பத்தி செய்ய முடியும். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள்ளாக 320,000 டன் பாஸ்பேட் உரம் நமக்கு வேண்டியிருக்குமென மதிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே இன்னொரு தொழிற்சாலை ஏற்படுவ

தற்கான தேவை உள்ளது. வருடம் ஒன்றுக்கு 60,000 டன் சூபர் பாஸ்பேட் உற்பத்தி செய்வதற்குத் தஞ்சாவூரில் ஒரு தொழிற்சாலையை அமைக்க முயற்சி நடைபெற்றுவருகின்றது. இதற்கும் அனுமதி கிடைக்குமென எதிர்பார்க்கிறோம்.

ரசாயனத் தொழில் வகைகளில் தாரங்கதாரா கெமிகல் வொர்க்ஸ் 30,000 டன் காஸ்டிக் சோடா உற்பத்தி செய்யும் ஒரு தொழிற்சாலையை அமைத்துத் தொழில் நடைபெறுவது அங்கத்தினர்களுக்குத் தெரியும். இதன் உற்பத்தி அளவை 60,000 டன்னுக்கு அதிகரிக்கத் திட்டமிடப்பட்டு அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. இத்தொழிற் சாலையில் உப பொருளாக வரக்கூடிய குளோரின் வாயுவைப் பயன்படுத்துவதற்கான ஒரு திட்டமும் பரிசீலனையில் இருந்து வருகிறது. இத் திட்டம் உருவானல் பிளாஸ்டிக் உற்பத்தி செய்வதற்கு மூலப்பொருளாக உள்ள பி.வி.சி. என்ற ரசாயனப் பொருளை வருடம் ஒன்றுக்கு 10,000 டன் அளவுக்கு உற்பத்தி செய்ய முடியும். தாழையூத்தில் வருடம் ஒன்றுக்கு 10,000 டன் கால்சியம் கார்பைட் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலை அமைக்கப்பட்டு உற்பத்தி ஆரம்பமாகியிருக்கிறது. மேட்டூரில் காஸ்டிக் சோடா, பீளிச்சிங் பவுடர், குளோரின் திரவம் ஆகிய ரசாயனப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இயந்திரக் கருவிகள் செய்யும் துறையிலும் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளோம். கோயம்புத்தூர் ஜில்லா விலும், சென்னை நகர்ப்புறத்திலும் பல முக்கிய என்ஜினீயரிங் தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. இவைகள் தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு நல்ல முறையில் உதவி வருகின்றன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நம்முடைய ராஜ்யத்தில் தொழில்களை நடத்துவதற்காக பதிவு செய்யப்பட்ட கம்பெனிகளின் எண்ணிக்கை 908. அவை களில் 66 பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளாகவும், 842 பிரைவேட் லிமிடெட் கம்பெனிகளாகவும் உள்ளன. பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளுக்காக மொத்தம் அனுமதிக்கப்பட்ட மூலதனம் 53·36 கோடி ரூபாய். அதில் செலுத்தப்பட்ட பங்குத் தொகை 4·53 கோடி ரூபாய். 842 பிரைவேட் கம்பெனிகளுக்கு அனுமதிக்கப்பட்ட பங்குத் தொகை 106·68 கோடி ரூபாய். செலுத்தப்பட்ட பங்குத் தொகை 42·64 கோடி ரூபாய். இந்தப் புள்ளி விவரங்கள் நம் ராஜ்யத்திலே ஏற்பட்டிருக்கக்கூடிய தொழில் வளர்ச்சியை ஓரளவுக்கு விளக்கிக் காட்டுகின்றன. ஆனல் நாட்டின் பொருளாதார வளர்ச்சி போதிய அளவிற்கு ஏற்பட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரம் கணிசமாக உயரவேண்டு

மென்று சொன்னால் இதைவிடப் பெரிய அளவில் தொழில் வளர்ச்சி ஏற்படுவது அவசியம். ஆகவே மேலும் தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கான திட்டங்கள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எடுக்கப்பட்டு நிறைவேற்றப் படுவது அத்தியாவசியமாகிறது.

23. நம் மக்களிடையே தொழில் நுட்ப அறிவும், தொழில் திறமையும் பெருகுவதுதான் இந்தத் தொழில் வளர்ச்சிக்கு அடிப்படை. சென்ற பத்தாண்டுகளில் இந்த அறிவையும், திறமையையும் வளர்ப்பதற்குத் தொழில் நுட்பக் கல்வித் துறையில் பல திட்டங்களை நிறைவேற்றியுள்ளோம். அதன் பயனாக இப்போது வருடம் ஒன்றுக்கு 1,157 மாணவர்கள் பொறியியல் கல்லூரிகளில் சேர வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. பாலிடெக்னிக் பள்ளிகளில் வருடம் ஒன்றுக்கு 2,910 மாண வர்கள் சேர இடவசதி செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் மூன்றாவது திட்டக் காலத்திலும் அதைத் தொடர்ந்து நான்காவது திட்டக் காலத்திலும் நமக்கு வேண்டிய பட்டப் படிப்புப் பெற்ற என்ஜினீயர்களையும், டிப்ளமா பெற்றவர் களையும் கணக்கெடுப்போமானால் பற்றாக்குறை ஏற்படும் என்றுதான் தோன்றுகிறது. ஆகவே பொறியியல் கல்லூரி களையும் பாலிடெக்னிக்குகளையும் இன்னும் அதிகப்படுத்த வேண்டியது அவசியமாகின்றது. மூன்றாவது திட்டக் காலத் தில் ஒரு பிராந்தியப் பொறியியல் கல்லூரியையும், தனியார் துறையில் இன்னொரு பொறியியல் கல்லூரியையும் ஆரம்பிப்ப தெனத் திட்டமிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு கல்லூரியிலும் வருடம் ஒன்றுக்கு 120 மாணவர்கள் சேர்க்கப்படுவதற்குப் பதிலாக 180 மாணவர்கள் சேர்க்கப்படுவார்கள். பிராந்தியப் பொறியியல் கல்லூரியில் வருடம் ஒன்றுக்கு 250 மாணவர்கள் சேருவதற்கு வசதி செய்யப்படும். இந்த முறையில் மூன்றாவது திட்ட முடிவிற்குள் பொறியியல் கல்லூரிகளில் வருடம் ஒன்றுக்கு 1,767 மாணவர்களைச் சேர்க்கமுடியும். பாலிடெக்னிக்குகளில் இப்போது இருப்பதைவிட மேலும் 700 பேர் சேருவதற்கான வசதிகள் செய்யப்படும். மூன்றாவது திட்டக் காலத்தில் தொழில் நுட்பக் கல்விக்காக 6·5 கோடி ரூபாய் செலவு செய்வதென முடிவு செய்யப் பட்டுள்ளது. இரண்டாவது திட்டக் காலத்தில் தொழில் நுட்பக் கல்விக்கு ஒதுக்கிய தொகை 3·37 கோடி ரூபாய். பொறியியல் துறையில் பெரிய அளவில் மேல்படிப்புப் போதிப் பதற்குரிய வசதிகளுடன் இந்தியத் தொழில் நுட்பக் கழகம் (இன்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜி) மத்திய சர்க் காரால் கிண்டியில் அமைக்கப்பட்டு நடைபெற்று வருகின்றது. அதற்கான கட்டிடங்கள் துரிதமாகக் கட்டப்பட்டு வருகின் றன. இதற்கு வேண்டிய உதவியை அளிக்க மேற்கு ஜெர்மன் சர்க்கார் முன்வந்துள்ளார்கள். மேற்கு ஜெர்மன் நிபுணர் களும் பேராசிரியர்களும் இந்த ஸ்தாபனத்தில் பணியாற்றி

தொழிற் கல்வி.

வருகின்றனர். இந்த ஸ்தாபனத்தின்மூலம் பொறியியல் துறையில் நல்ல முன்னேற்றங்கள் காண்பதற்கு வாய்ப்புகள் உள்ளன.

நாட்டின் பெருந்தொழில்கள் இயங்குவதற்குப் பொறியியல் பட்டதாரிகள், டிப்ளமா உடையவர்கள் மட்டும் போதாது. பிட்டர், வெல்டர் போன்ற பல்வேறு கைப்பணியாளர்களும் அத்தியாவசியம். இந்த ரகத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான நிலையங்களும் நம் ராஜ்யத்தில் பல இயங்கிவருகின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஆண்டு ஒன்றுக்கு 768 நபர்களைச் சேர்த்துக் கொள்ளக்கூடிய வசதி இந்தப் பயிற்சி நிலையங்களில் இருந்தன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மேலும் 2,400 பேருக்குப் பயிற்சி அளிப்பதற்கான அளவிற்கு நிலையங்கள் திறக்கப்பட்டன. இதைத் தவிர்த்துத் தனியார் நடத்தும் தொழிற்சாலைகளில் 305 பேர்கள் தொழில் பயிற்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்துள்ளார்கள். தொழிலாளர்கள் ஓய்வு நேரங்களில் பயிற்சி பெற்றுத் தங்களுடைய அறிவையும் திறமையையும் பெருக்கிக்கொள்வதற்கான வாய்ப்பைக் கொடுப்பதற்காக, சாயங்கால வேளைகளில் நடைபெறும் இரண்டு பயிற்சி நிலையங்களும் திறக்கப்பட்டு இருக்கின்றன. இவைகளில் 400 பேர் பயிற்சி பெற இடமுள்ளது. இந்தத் தொழில் பயிற்சித் திட்டங்களுக்காக இரண்டாவது திட்டக் காலத்தில் 97 லட்சம் ரூபாய் செலவு செய்யப் பட்டது. மூன்றாவது திட்டக் காலத்தில் இவ் வகையில் 3·25 கோடி ரூபாய் செலவு செய்யத் திட்டமிட்டுள்ளோம். மேலும் 14 தொழில் பயிற்சி நிலையங்கள் ஏற்பாடு செய்து அவைகளில் 3,500 பேருக்குப் பயிற்சி கொடுப்பதற்கு வகை செய்யப்படும். சாயங்கால வேளைகளில் பயிற்சி கொடுக்கும் நிலையங்கள் மேலும் இரண்டு திறக்கப்படும்.

பெருமளவில் தொழில் வளர்ச்சி ஏற்படுகின்ற கட்டத்தில் தொழில் ஸ்தாபனங்களே பயிற்சி கொடுப்பதற்கான ஏற்பாடு களைச் செய்வது மிகவும் தேவை. பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையில் இவ்வாறு பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்துள்ளார்கள். தனியார் துறையிலுள்ள பெரிய தொழில் ஸ்தாபனங்களும் இந்தப் பணியில் ஈடுபட முன் வருவது மிகவும் அவசியம். இதற்கான திட்டம் ஒன்றை வகுப்பதற்குச் சர்க்காரும் வேண்டிய உதவியைச் செய்ய வேண்டும்.

சிறு ரகத் தொழில்கள்

24. ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு, பெருந் தொழில் கள் மட்டும் இருந்தால் போதாது. சிறிய தொழில்கள் பெருமளவில் அமைவதன் மூலமாகத்தான் வேலை வாய்ப்புகள் பரவலாக ஏற்படுவதுடன், மக்களின் தொழில் திறனும் விருத்தி அடைய முடியும். சிறு ரகத் தொழில்களை

அமைப்பதில் நமது ராஜ்யம் முன்னணியில் இருந்து வருகின்றது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 12 லட்சம் ரூபாய்தான் இத்துறையில் செலவழிக்கப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் 3.96 லட்சம் ரூபாய் சிறு ரகத் தொழில்களுக்காகச் செலவழிக்கப்படுவதுடன் தொழில் பண்ணைகளை அமைப்பதற்கும் 1·54 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டுள்ளது. கிண்டியிலும், விருதுநகரிலும் இரண்டு தொழில் பண்ணைகளும் மார்த்தாண்டம், பேட்டை, மதுரை, திருச்சிராப்பள்ளி, ஈரோடு ஆகிய இடங்களில் ஐந்து தொழிற்பேட்டைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தஞ்சையில் அமைக்கப்பட்டுவரும் தொழிற்பேட்டை கூடிய சீக்கிரத்தில் ஆரம்பிக்கும். காட்பாடியில் ஒரு பேட்டை கட்டப்பட்டுவருவதுடன் சேலத்தில் ஒன்றும் அமைப்பதற்கான பூர்வாங்க வேலைகள் நடைபெற்று வருகின்றன. கிண்டியில் அமைக்கப்பட்டுள்ள தொழிற் பண்ணை மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுத் தற்போது 128 தொழிற் கூடங்கள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. சுமார் 3,000 பேர்கள் இவைகளில் பணிபுரிந்து, வருஷம் ஒன்றுக்கு இரண்டு கோடிக்கு மேற்பட்ட மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரக் கூடிய தொழில் நிபுணர்கள் இப் பண்ணை அமைப்பைக் கண்டு அவர்களுடைய பாராட்டுதல்களைத் தெரிவித்துள்ளார்கள்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் சிறு ரகத் தொழில்கள் அமைப்பதற்காகவும், தொழில் பண்ணைகளுக்காகவும் மொத்தம் 11·2 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது, 1961-62-ல் கோவையில் வெப்பப் பக்குவ சாலை (heat treatment shop) ஒன்றும், கருவி நிலையம் (tools room) ஒன்றும், பொதுத் தொழில் வசதித் தொழிற்சாலை (common lease shop) ஒன்றும் ஆரம்பிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. சேலத்தில் கருவி நிலையமும் (tools room), மதுரையில் ஒரு பொதுத் தொழில் வசதித் தொழிற்சாலை (common lease shop) யும் கார்குடியில் ஒரு மரம் அறுக்கும் தொழிற்சாலை (saw mill) யும் அமைக்கப்படும். ஐந்து கிராமப் பட்டறைகள் (rural workshops) கரூர், நாமக்கல், திருப்பூர், நாகர்கோயில், விழுப்புரம் ஆகிய இடங்களில் ஏற்பாடு செய்யப்படும். சென்னையில் இரும்பு உருக்குக் கட்டுமான (structural) தொழிற்சாலை ஒன்று ஆரம்பிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. கோவையிலும் மதுரையிலும் கச்சா பொருள் கிடங்குகள் (raw materials depot) ஆரம்பிக்க பட்ஜெட்டில் நிதி வசதி செய்யப்பட்டிருக்கிறது. அத்துடன் மதுரை, கோயம்புத்தூர், நாகர்கோயில் ஆகிய இடங்களில் கருவி அமைப்புப் பயிற்சி (tool design) களுக்கான நிலையங்களும், அச்சு வார்ப்படம் (dyes), பீங்கான் பாண்டம் (ceramic wares) போன்ற தொழில்கள் ஆரம்பிக்கவும் ஏற்பாடு செய்யப்படும்.

தனியார் துறையில் சிறு ரகக் கைத்தொழில்கள் ஆரம்பிக்கக் கடன் உதவி செய்வதற்காக ரூ 30 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. மூன்ருவது திட்டக் காலத்தில் கீழே விவரித்து இருக்கின்ற பிரகாரம் பல்வேறு இடங்களில் தொழிற்பேட்டைகளும், பண்ணைகளும் அமைக்க ஏற்பாடு செய்யப்படும் :—

| | (ரூபாய் லட்சத்தில்) |
|---|---|
| (1) 5,000 ஜனத்தொகைக்கு உட்பட்டு இருக்கக் கூடிய இடங்களில் வேலைக்கூடம் (works shed) ஆரம்பிப்பதற்காக .. .. .. | 5·80 |
| (2) 20,000 மக்களுக்கு மேற்படாமல் இருக்கக் கூடிய நகரங்களில் இரண்டு பேட்டைகள் அமைக்க [அவைகளில் ஒன்று தேனியில், மற்ருென்று விருத்தாசலத்தில் பீங்கான் பாண்டத் (ceramic wares) தொழிற் பண்ணை யாக அமைக்கப்படும்] .. .. .. | 25·00 |
| (3) 50,000-க்கு மேற்படாத ஜனத்தொகை கொண்ட புதுக்கோட்டை, காரைக்குடி, அரக்கோணம், கிருஷ்ணகிரி, கோயில்பட்டி ஆகிய இடங்களில் ஐந்து பேட்டைகள் அமைக்க .. .. .. .. .. | 31·00 |
| (4) ஒரு லட்சம் அளவில் ஜனத்தொகை கொண்ட தேவகோட்டை, திண்டுக்கல், கும்ப கோணம், ராஜபாளையம் ஆகிய நான்கு இடங்களில் ஐந்து தொழிற் பண்ணைகள் அமைக்க .. .. .. .. .. | 41·00 |
| (5) அம்பத்தூரில், கிண்டியில் இருப்பது போன்று ஒரு பெரிய தொழிற் பண்ணையும், பெரம் பூரில் தோல் தொழில்களுக்காக இரண்டு பண்ணைகளும் ஏற்படுத்துவதற்கு .. .. | 95·00 |
| (6) தொழில் நிலையங்கள் அமைப்பதற்காகக் கிண்டியிலும், அம்பத்தூரிலும் நிலங்களைத் தயார் செய்து கொடுப்பதற்காக .. .. | 45·00 |
| (7) இரண்டாம் திட்டக் காலத்தில் ஆரம்பிக்கப் பட்ட பண்ணைகளையும் பேட்டைகளையும் விரிவுபடுத்துவதற்காக .. .. .. | 50·00 |
| (8) தொழிற்பேட்டைகளிலும், பண்ணைகளிலும் வாடகை மானியம் கொடுப்பதற்காக .. | 7·20 |
| மொத்தம் .. | 3,00·00 |

இவ்வாறு மூன்ருவது திட்டக் காலத்தில் 3 கோடி ரூபாய் அளவில் பல தொழிற் பண்ணைகளும் பேட்டைகளும் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அத்துடன், தனியார் துறையில், பேட்டைகளும் பண்ணைகளும் அமைக்க முன் வருவார்களேயானல் அவர்கள் செய்யும் முதலீட்டில் 80 சத வீதம் எளிய வட்டி விகிதத்தில் கடனுகக் கொடுத்து உதவவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

சிறு ரகத் தொழிலில் ஏற்பட்டிருக்கக்கூடிய முன்னேற்றத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு தனிப்பட்டவர்கள் பல தொழில்கள் ஆரம்பிக்க முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. இவ்வகையில் தமிழ் நாடு முழுவதிலும் சிறு தொழில்களைப் பரவலாக ஏற்படுத்துவதன் மூலம்தான் உண்மையான தொழில் வளம் பெருக முடியும்.

25. தொழிலுக்கான எரிபொருள் வசதி குறைந்துள்ள நம் பகுதியில் மேலே விவரித்துள்ள பிரகாரம் தொழில் வளம் பெருக வேண்டுமேயானல், போதுமான அளவு மின்சார உற்பத்தியைப் பெருக்குவது அவசியமாகின்றது. நமது ராஜ்யத்தில் மின்சார உற்பத்தியைக் கணிசமான அளவில் பெருகுவதற்குத் தொடர்ந்து முயற்சி எடுத்து வந்திருக்கிரும். முதல் திட்ட ஆரம்ப காலத்தில் 156 ஆயிரம் கிலோவாட் உற்பத்திச் சக்திதான் ஏற்பட்டிருந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள் 2·56 லட்சம் கிலோவாட் அளவிற்கு உற்பத்தி பெருக்கப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் 5·71 லட்சம் கிலோவாட்டுகள் உற்பத்தி செய்வதற்காகப் பல புதிய திட்டங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன. சென்னையிலுள்ள அனல் மின்சார நிலையம், பெரியாறு மின்சாரத் திட்டம், குந்தா மின்சாரத் திட்டம் ஆகியவை இரண்டாவது திட்டக் காலத்தில் ஏற்பட்டவைகள். மூன்ருவது திட்டக் காலத்தில் 10,41,000 கிலோவாட் அளவில் உற்பத்தியைப் பெருக்குவதற்குத் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இதற்கு மேல் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரியை உபயோகப்படுத்தி நான்கு லட்சம் கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்யப்படும். இவ்வாறு மூன்ருவது திட்ட இறுதியில் 14·41 லட்சம் கிலோவாட் மின்சார சக்தி நமது ராஜ்யத்தில் உற்பத்தியாகும். இந்த அளவிற்கு மின்சார உற்பத்திப் பெருகுமானலும்கூட இது தேவைக்குப் போதுமானதாக இருக்காது என்று கணக்கிடப் பட்டிருக்கிறது. 1966-ம் ஆண்டில் 15·4 லட்சம் கிலோவாட்டாவது தேவைப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 14·41 லட்சம் கிலோவாட்டுகள் உற்பத்தியாகக்கூடிய திட்டங்கள் அமைந்திருந்தாலும்கூட இவைகளில் பெரும் பகுதி நீர் மின்சாரத் திட்டங்களாக இருக்கின்ற காரணத்தினல் நீர் வசதி இல்லாத காலங்களில் இந்த அளவுக்கு

மின்சாரம்.

உற்பத்தியாவது முடியாது. நிரந்தரமாகக் கிடைக்கக் கூடிய மின்சார அளவு 9·62 லட்சம் கிலோவாட்டுகளாக இருக்கும். ஆகவே, இரண்டாவது திட்டக் காலத்தில் மின்சாரத் திட்டங்களுக்காக 79 கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டும், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் மாநிலத் திட்டத்தில் மட்டும் மின்சார உற்பத்திக்காக 100 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தும் நமது தேவைக்குப் போதுமான அளவு மின்சார உற்பத்தி ஏற்படாது என்கின்ற நிலைதான் உள்ளது. ஆகவே விவசாயம், தொழில் போன்ற பல்வேறு துறைகளுக்கும் மின்சாரத்தை எந்த முறையில் பங்கிட்டுக் கொடுப்பது என்பதை ஆராய்வது அவசிய மாகின்றது. அண்டை ராஜ்யங்களிலே இருக்கக்கூடிய மின்சாரத் திட்டங்கள் ஒன்றுக்கொன்று இணைக்கப்படுவதன் மூலமாகவும் ஓரளவு அவ்வப்பொழுது மின்சாரத் தட்டுதல் ஏற்படுவதைச் சமாளிக்க முடியும். நம்முடைய மின்சார இணைப்பைக் கேரளத்துடனும், மைசூருடனும் பொருத்த வேண்டி இருக்கிறது. நீர் விசை மூலம் மின்சார உற்பத்தி செய்யக்கூடிய எல்லா வசதிகளும் நம் ராஜ்யத்தில் உபயோகப்படுத்தப்பட்டு விட்டன. இதற்கு மேலும் நீர் மின்சாரத் திட்டங்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமானல் மேற்குத் தொடர்ச்சி மலையில் இருக்கக்கூடிய நீர் விசையை உபயோகப்படுத்துவதற்கு, அண்டை ராஜ்யங்களுடைய சம்மதத்தைப் பெற்று ஏற்பாடு செய்வதன் மூலமாகத்தான் முடியும். அத்துடன் தொடர்ந்து மின்சாரம் குறைவின்றிக் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமானல் அணு சக்தியைப் பயன்படுத்தி மின்சாரம் உற்பத்தி செய்வது அவசியமாகும். இதற்கான முயற்சிகளை எடுத்துக் கொள்வது அவசியம்.

1951-ம் ஆண்டில் நபர் ஒன்றுக்கு 12 யூனிட்டுகள் வீதந்தான் மின்சாரம் உபயோகப்படுத்தப்பட்டு வந்தது. தற்போது அது 60 யூனிட்டுகளாக உயர்ந்திருக்கிறது. 1966 முடிவிற்குள் 160 யூனிட்டு அளவில் இருக்கும். மின்சார சக்தி விநியோக மூலம் கிடைத்த மொத்த வருமானம் 1951-ல் ரூபாய் 3 கோடியாக இருந்தது. தற்போது 15 கோடி அளவில் உள்ளது. 1966-ல் 40 கோடி ரூபாய் அளவிற்கு உயரும். இப்புள்ளி விவரங்கள் மின்சாரத் துறையில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றத்தை ஓரளவு விளக்கிக் காட்டும்.

கிராமப் பகுதிகளுக்கு மின்சாரம் வழங்குவதிலே கணிச மான முன்னேற்றம் கண்டுள்ளோம். முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் 1,813 கிராமங்கள் மின்சார வசதி பெற்றிருந்தன. இப்போது 10,000-க்கு மேற்பட்ட கிராமங்கள் இந்த வசதியைப் பெற்றுள்ளன. மூன்ருவது

திட்டக் காலத்தில் எல்லாக் கிராமங்களுக்கும் இவ்வசதியை விரிவாக்க முடியும் என்ற நம்பிக்கை உள்ளது. தண்ணீர் இறைக்கும் பம்பு செட்டுகள் 1951-ல் 14,000 ஆக இருந்தவை இப்போது 1·16 லட்சமாக உயர்ந்துள்ளன.

1961–62 பட்ஜெட்டில் மேட்டூர் மலைக்குடைவுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கும் குந்தாத் திட்டத்தில் மிகுதியுள்ள பகுதியை நிறைவேற்றுவதற்கும் நிதி ஒதுக்கப் பட்டுள்ளது. மேட்டூர் மலைக்குடைவுத் திட்டத்திற்கு ரஷ்யா உதவி செய்ய முன் வந்துள்ளது. குந்தாத் திட்ட முதல் பகுதிக்கு உதவிய கனடா சர்க்கார் மிகுதியிருக்கும் பகுதிக்கும் உதவி அளிக்க முன் வந்துள்ளது. 1961–62-ம் ஆண்டில் சென்னை ராஜ்ய மின்சார போர்டு சுமார் 15 கோடி ரூபாய் அளவிற்குத் திட்டங்களை எடுத்து நிறைவேற்றும். இதற்காக 7·84 கோடி ரூபாய் ராஜ்ய சர்க்கார் கடனாகக் கொடுத்து உதவும். பாக்கித் தொகையைப் போர்டு தன்னுடைய நிதியிலிருந்து ஏற்பாடு செய்து கொடுக்கும். பட்ஜெட் ஆண்டில் 1,600 கிராமங்களுக்கு மின்சார வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தனியார் துறையிலுள்ள மின்சாரம் வழங்கும் கம்பெனிகளுக்கு 25 லட்சம் ரூபாய் கடன் உதவி, அவர்கள் பகுதியிலுள்ள கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்புச் செய்ய ஏற்பாடு செய்யப் படும்.

மின்சாரம் உபயோகிக்கும் குடியானவர்கள் குறைந்த பட்சம் செலுத்த வேண்டிய கட்டணத்தைப் பற்றிப் பரிசீலனை செய்ய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருக்கும். பிற்போக்கான பகுதியிலே இருப்பவர்களுக்குக் குறைந்த கட்டணம் 50 ரூபாயிலிருந்து 35 ரூபாயாகவும், மற்றப் பகுதிகளில் 45 ரூபாயாகவும் குறைக்கப்பட வேண்டுமென்றும் இந்தக் கமிட்டி சிபாரிசு செய்திருக்கின்றது. இந்தச் சிபாரிசைச் சர்க்காரும் ஏற்றுக்கொண்டு அதற்கான ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

கிராமப் பகுதிகளுக்கு மின்சாரம் வழங்குவதில், ஆகின்ற செலவைவிடக் குறைவாகவே வசூலிக்கப்படுகின்றது என்பதை நாம் உணர வேண்டும். அதற்கு முக்கிய காரணம் கிராமப் பகுதிகளில் மின்சாரம் பெரும்பாலும் தண்ணீர் இறைப்பதற்காகவே உபயோகப்படுகின்றது. தண்ணீர் இறைப்பது போக, கிராமப் பகுதிகளில் சிறிய தொழில்களுக்கும் மின்சாரத்தைப் பயன்படுத்துவதன் மூலம்தான் மின்சாரத் துறை வருவாயைப் போதுமான அளவுக்குப் பெருக்க முடியும். ஆகவே பலதரப்பட்ட சிறிய தொழில்களைக் கிராமப் பகுதிகளில் ஆரம்பிப்பதற்காக, மக்கள் முன்

வருவதற்கான சூழ்நிலையை ஏற்படுத்துவது மிகவும் அவசியம். பின் எல்லாக் கிராமப் பகுதிகளிலும் சுலபமாக மின்சார வசதியை விஸ்தரித்துவிட முடியும். பொதுவாக வசூலிக்கப் படக்கூடிய கட்டணத்தையும் போகப் போக உயர்த்த வேண்டிய நிலை ஏற்படலாம். ஏனெனில் குறைந்த செலவில் மின்சாரம் உற்பத்தியாகக்கூடிய எல்லா நீர் மின்சாரத் திட்டங்களும் அநேகமாக முடிவடைந்துவிட்டன. எதிர் காலத்தில் எடுக்கப்படும் திட்டங்களில் மின்சார உற்பத்தியின் செலவு அதிக அளவில்தான் இருக்கும். ஆனால், நல்ல லாபம் வரக்கூடிய முறையிலே தொழில்கள் அமைந்து இயங்குமேயானல் மின்சாரக் கட்டணம் செலுத்துவதற்கு யாரும் தயங்கமாட்டார்கள்.

போக்கு வரத்து.

26. தொழில் வளர்ச்சிக்கு முக்கியமாக வேண்டிய இன்னொரு வசதி நல்ல போக்குவரத்துச் சாதனங்கள். நம் ராஜ்யப் பகுதியில் சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும் புதிய ரயில் பாதைகள் ஒன்றும் அமைக்கப்பட வில்லை. தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கேற்ப ரயில் வசதியும் பெருக வேண்டியது அவசியமென்பதைப் பற்றி யாரும் மறுக்க முடியாது. அதிலும், முக்கியமாக நெய்வேலியில் ஏற்படக்கூடிய தொழில் வளத்தை நல்ல முறையிலே பயன் படுத்த வேண்டுமென்று சொன்னல் அதைப் பல பாகங் களுக்கும் இணைக்கக்கூடிய முறையில் புதிய ரயில் பாதைகள் அமைத்தாக வேண்டும். ஆகவேதான், சேலம்-பெங்களூர் ரயில் பாதையை அமைப்பது அவசியம் என்பதை வலியுறுத்தி வந்திருக்கின்றோம். இன்னும் சில புதிய ரயில் பாதைகள் ஆங்காங்குத் தேவைப்படுகின்றன. மூன்ருவது திட்டக் காலத்தில் மிகவும் அவசியமான ரயில் பாதைகளையாவது உடனடியாக அமைக்க முன் வரவேண்டுமென்று மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டுள்ளோம். சமீபத்திலே பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்ட ரயில்வே பட்ஜெட் உரையிலும் ரயில்வே மந்திரி இதைப்பற்றிக் குறிப்பிட் டிருப்பது நமக்கு நம்பிக்கையை அளிக்கக்கூடியதாக இருக்கிறது.

தொழில் வளப் பெருக்கத்திற்கு ரயில் பாதைகளோடு மட்டுமல்லாமல் சாலை வசதிகளும் பெரிய அளவில் அமைய வேண்டியது அவசியம். சில நாடுகளில் ரயில் பாதையைவிட ரோடு அமைப்புகளுக்கு முக்கிய இடம் கொடுக்கப்படுகிறது. நமது ராஜ்யத்தில் சென்ற பத்தாண்டுகளில் சாலைகள் அமைப்பதில் பெரிய முன்னேற்றம் கண்டுள்ளோம். தமிழ் நாட்டில் நல்ல சாலை வசதிகள் ஏற்பட்டிருக் கின்றன என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். முதல் திட்ட ஆரம்ப காலத்தில் நம் ராஜ்யத்தில்

6,800 மைல் கிராம ரோடுகளும், 14,400 மைல் நீளமுள்ள மற்ற சாலைகளும் இருந்தன. முதல் திட்டக் காலத்தில் 1,643 மைல் கப்பி ரோடாக மாற்றப்பட்டது. 2,850 மைல் புதிய மண் ரோடுகளும் அமைக்கப்பட்டன. இரண்டாவது திட்டக் காலத்தில் 2,860 மைல் கப்பி ரோடுகள் அமைப்பதற்கும், 1,830 மைல் புதிய ரோடுகள் அமைப்பதற்கும் திட்டமிட்டு நிறைவேற்றப்பட்டுள்ளது. ஆகவே சென்ற பத்தாண்டுகளில் 4,680 மைல் புதிய ரோடுகள் அமைக்கப்பட்டுள்ளன. அத்துடன் ரோடுகள் பராமரிப்பிலும் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கின்றோம். இரண்டாவது திட்ட முடிவுக் காலத்தில் கீழே விவரிக்கப் பட்டிருக்கின்ற கணக்குப்படி சாலைகள் ஏற்பட்டிருக்கும் :—

| எண். | சாலை வகை. | 1950–51-ல் சாலைகளின் நீளம்—முதல் திட்டத் தொடக்கம். | 1955–56-ல் சாலைகளின் நீளம்—இரண்டாம் திட்டத் தொடக்கம். | 1960–61-ல் சாலைகளின் நீளம்—இரண்டாம் திட்ட முடிவில். |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | சிமெண்ட் காங்கிரீட் சாலை .. | 188 | 276 | 319 |
| 2. | தார்ப் போட்ட சாலை .. | 926 | 4,616 | 7,111 |
| 3. | கப்பி போட்ட சாலை .. | 12,953 | 10,818 | 11,143 |
| 4. | கப்பி போடாத சாலை .. | 7,131 | 8,335 | 7,305 |
| | மொத்தம் .. | 21,198 | 24,045 | 25,878 |

மேலே குறிப்பிட்டிருக்கும் புள்ளி விவரங்களிலிருந்து தார் ரோடுகள் அமைப்பதில் நாம் நல்ல முன்னேற்றம் கண்டிருக் கின்றோம் என்பது நன்கு விளங்கும். ரோடுகள் பராமரிப்பில் நாம் எடுத்திருக்கக்கூடிய ஒரு முக்கியமான முடிவு ஜில்லா போர்டின் கீழிருந்த எல்லா முக்கிய சாலைகளையும் சர்க்காரே எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது. சென்ற ஐந்தாண்டுகளில் 3,840 மைல் நீளமுள்ள ரோடுகள் சர்க்கார் நிர்வாகத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. தொடர்ந்து படிப்படியாக மேலும் முக்கிய சாலைகள் சர்க்கார் நிர்வாகத்தின்கீழ்க் கொண்டுவரப்படும். தற்போது புதிதாக எடுத்துக்கொள்ளப்பட்ட ரோடுகளுக்காக மட்டும் சர்க்கார் வருடம் ஒன்றுக்கு 1,02 லட்சம் ரூபாய் அதிகமாகச் செலவு செய்யவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது.

பல புதிய பாலங்களையும் கட்டி, ரோடு போக்குவரத்து வசதியை அபிவிருத்தி செய்திருக்கின்றோம். இரண்டாவது திட்டக் காலத்தில் சர்க்கார் நிர்வாகத்தின்கீழ் இருக்கக்

கூடிய சாலைகளில் 31 பெரும் பாலங்களும், 104 சிறிய பாலங்களும் கட்டி முடித்திருக்கின்றனர். ஜில்லா போர்டு நிர்வாகத்தின்கீழ் இருக்கக்கூடிய ரோடுகளில் 12 பெரிய பாலங்களும், 120 சிறிய பாலங்களும் கட்டி முடிக்கப் பட்டுள்ளன. தற்போது ரோடுகள் அமைப்பதற்கும் பராமரிப்புக்குமாக ஆண்டு ஒன்றுக்கு 5 கோடி ரூபாய் அளவுக்குச் செலவழித்து வருகின்றோம். இவைகளில் சுமார் 3 கோடி ரூபாய் ரோடுப் பராமரிப்புக்காக மட்டும் செலவாகின்றது. மூன்றாவது திட்டத்தில் ரோடு அபிவிருத்திக்காக 11 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

இதுவரையிலும் ஜில்லா போர்டு நிர்வாகத்தின் கீழிருந்து வந்த ரோடுகளில் சர்க்கார் நிர்வாகத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டவை போக எஞ்சியுள்ள ரோடுகளின் பராமரிப்பு, பஞ்சாயத்து யூனியன்களின் பொறுப்பாகும். அதற்காக ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனுக்கும் தலை ஒன்றுக்கு 40 ந.பை. வீதம் சர்க்கார் மானியம் கொடுக்கப்படும். இதன் மூலம் வருடம் ஒன்றுக்கு 1,20 லட்சம் ரூபாய் செலவாகுமென எதிர்பார்க்கப்படுகிறது.

சாலை அபிவிருத்தித் திட்டங்கள் தொடர்ந்து மூன்றாவது திட்டக் காலத்திலும் நடைபெற்று வரும். 1961-62-ம் ஆண்டில் 182 மைல் அளவிற்குப் புதிய ரோடுகள் அமைக்கவும், 197 மைல் அளவிற்குப் பழைய ரோடுகளின் தரத்தை உயர்த்துவதற்கும், 46 பாலங்களும் கல்வர்ட்களும் அமைப்பதற்கும் 1·88 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

எதிர்காலத்தில் ரோடுகளின் தரத்தை உயர்த்துவதில் நாம் முக்கிய கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. அவைகளிலும் சிறப்பாகத் தொழில் வளர்ச்சி ஏற்படக்கூடிய பகுதிகளில் பளுவான வாகனங்கள் செல்லக்கூடிய முறையில் பாலங்களைப் பலப்படுத்தவும், ரோடுகளின் தரத்தை உயர்த்தவும் ஏற்பாடு செய்வது மிக அவசியம். இம்முறையில் சேலம்-நெய்வேலிப் பகுதியிலுள்ள ரோடுகளையும், கோயம்புத்தூர்-மேட்டூர்ப் பகுதியிலுள்ள ரோடுகளையும், தூத்துக்குடிப் பகுதியிலுள்ள ரோடுகளையும் பலப்படுத்துவதற்குத் திட்டமிடவேண்டும்.

சென்னை நகருக்குள்ளும் இப்போது போக்குவரத்து நெருக்கடி அதிகமாகிக் கொண்டு வருகிறது. அதற்கேற்ற முறையில் ரோடு வசதிகளை விஸ்தரிப்பது மிகவும் அவசியம். தற்போது இருக்கக்கூடிய நெருக்கடியைத் தீர்க்கின்ற அடிப்படையில் மட்டும் நோக்காமல், 15 ஆண்டு அல்லது 20 ஆண்டுகளுக்கு பிற்பாடு எந்த அளவிற்குப் போக்குவரத்துப் பெருகும் என்பதையும் ஊகித்து, அதற்கேற்ற முறையில் ரோடுகளை விரிவுபடுத்துவது அவசியமாகின்றது. இதற்காக மூன்றாவது திட்டக் காலத்தில் 1,50 லட்சம் ரூபாய் அளவிற்குச்

25th February 1961] [Sri C. Subramaniam]

செலவு செய்ய உத்தேசித்துள்ளோம். 1961-62-ல் சென்னை நகர ரோடு அபிவிருத்திகளுக்காக மட்டும் வரவு-செலவுத் திட்டத்தில் 58 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

27. பெரும் தொழில் வளர்ச்சி ஏற்படும்பொழுது வெளி நாடுகளிலிருந்து யந்திரம், சில முக்கிய மூலப்பொருள்கள் போன்ற பலவற்றை இறக்குமதி செய்வது அவசியமாகின்றது. அதே சமயத்தில் நம் நாட்டில் இருக்கக்கூடிய பல பொருள்களை வெளிநாட்டிற்கு அனுப்புவதன்மூலம்தான் நாம் பல பொருள்களை இறக்குமதி செய்வதற்கான அன்னியச் செலாவணியைச் சேகரிக்க முடியும். ஆகவே வெளிநாட்டு வர்த்தகம் ஏற்றுமதி இறக்குமதி இருவகைகளிலும் பெருகிக் கொண்டே போகக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. அதற்கேற்றபடி துறைமுக வசதிகளையும் விரிவாக்கியாக வேண்டும். சென்னைத் துறைமுகம் இந்த அடிப்படையில்தான் இப்போது பெரிய அளவில் விரிவாக்கப்பட்டு வருகின்றது. 1896-ம் வருஷம் ஏற்பட்ட இந்தத் துறைமுகம் 1911 வரை எந்த விதமான முக்கிய வசதிகளும் இல்லாமலேயே இயங்கி வந்திருக்கிறது. 1911-ல் சில புதிய வசதிகள் அங்கு ஏற்பாடு செய்யப்பட்டன. பிறகு 40 வருடங்களுக்கு அதாவது 1951-ம் ஆண்டு வரை எந்த விதமான அபிவிருத்தியுமே ஏற்படவில்லை. 1930-ம் ஆண்டுவாக்கில் இத் துறைமுக வழியாக 10 லட்சம் டன் அளவிற்குப் பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதியாகி வந்தன. இரண்டாவது யுத்தம் ஆரம்பித்ததன் காரணமாக இங்கு நடைபெற்று வந்த வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டது. ஆனால் இரண்டாவது யுத்தம் முடிந்தவுடன் 20 லட்சம் டன் அளவிற்குப் பல இயந்திரங்களும், உணவுப் பொருள்களும் இங்கு இறக்குமதியாக ஆரம்பமாயின. துறைமுகத்தில் இருந்த வசதிகள் இவைகளுக்குப் போதுமானவையாக இல்லை. ஆகவே துறைமுகத்தை விரிவு படுத்தத் திட்டமிட வேண்டியது அவசியமாயிற்று. துறைமுக நிர்வாகத்தினிடமிருந்த நிலம் மிகக் குறைவாக இருந்த காரணத்தினுல் இருக்கின்ற பகுதிக்குள் இந்தத் திட்டத்தை ஏற்பாடு செய்வது கஷ்டமாயிற்று. துறைமுக அபிவிருத்தியின் அவசியத்தை உணர்ந்து நம் ராஜ்ய சர்க்காரும் இப்போது துறைமுகத்தின் தென் பகுதியிலே இருக்கக் கூடிய கடற்கரைப் பகுதியைத் துறைமுக விஸ்தரிப்புக் காகக் கொடுத்திருக்கிருர்கள். 1952-ம் ஆண்டில் 86 ஏக்கரா மதராஸ் போர்ட் டிரஸ்டுக்குக் கொடுக்கப்பட்டது. பிற்பாடு இந்த நிலமும் போதாது என்ற நிலைமை ஏற்பட்ட காரணத்தினுல் கூவம் நதி வரையில் இருக்கக்கூடிய 77 ஏக்கரா நிலத்தைச் சர்க்கார் மேலும் கொடுத்து உதவி யுள்ளது.

துறைமுகங்கள்

[Sri C. Subramaniam] [25th February 1961

பல பொருள்கள் சென்னைத் துறைமுகத்தில் இறக்குமதியானதுடன் சமீபகாலத்தில் இரும்புக்கனி இங்கிருந்து பெரிய அளவில் ஏற்றுமதியாகி வருகின்றது. 1950-ம் ஆண்டில் சுமார் 20,000 டன் அளவிற்கு இரும்புக்கனி இத்துறைமுகத்திலிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டது. தற்போது அது 7·8 லட்சம் டன் அளவிற்கு உயர்ந்துள்ளது. அடுத்த 5 அல்லது 10 வருஷங்களுக்குள்ளாக 30 அல்லது 40 லட்சம் டன் அளவிற்கு இரும்புக்கனி ஏற்றுமதியாகலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. இந்த வர்த்தக அபிவிருத்திகளையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு சென்னைத் துறைமுகம் இன்றைக்கு விரிவாக்கப்பட்டு வருகின்றது.

கப்பல்கள் வந்து நிற்பதற்கும், கப்பல்களிலிருந்து பிரயாணிகள் இறங்குவதற்கும், வெவ்வேறு பொருள்களை இறக்குவதற்கும் வேண்டிய பல்வேறு திட்டங்கள் இன்று நிறைவேறி வருகின்றன. அவை எல்லாவற்றிற்கும் அவசியமான அலுவலகம், ஆஸ்பத்திரி, வொர்க்ஸ் ஷாப் வசதி, பணியாளர்களுக்கு வீடு கட்டும் வசதி இவைகள் எல்லாம் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இத் திட்டத்தில் மொத்தம் 16 கோடி ரூபாய் செலவழிக்கப்படும்.

(Deputy Speaker in the Chair.)

சென்னைத் துறைமுகம் இந்த அளவில் பெரிதாக்கப்பட்டாலும்கூட, இந்த ஒரு துறைமுகம் மட்டும் நம்முடைய தேவையைப் பூர்த்தி செய்வது இயலாத காரியம். துறைமுக வசதி சென்னையில் மட்டும் இருக்கக்கூடிய காரணத்தினால் பல பெரும் தொழில்கள் சென்னைக்கு அருகாமையில் அமைந்து, அதன் காரணமாக இப்பொழுதே பல நெருக்கடிகள் ஏற்பட்டுக்கொண்டு இருக்கின்றன. ஆகவே இன்னொரு பெரிய துறைமுகத்திற்கு ஏற்பாடு செய்வது மிகவும் அவசியமாகின்றது. இந்த அடிப்படையில்தான் சென்னை அரசினர் தூத்துக்குடித் துறைமுகத்தை ஒரு ஆழ்கடல் துறைமுகமாக மாற்றவேண்டுமென்று அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கின்றனர். மூன்றாவது திட்டக் காலத்தில் தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தித் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமென இப்போது முடிவாகி இருப்பதை எல்லோரும் வரவேற்பார்கள். அந்தத் திட்டத்தைத் துரிதமாக நிறைவேற்றி வைப்பதற்கு எல்லா நடவடிக்கைகளும் உடனடியாக எடுக்கப்படுமென நம்புகிறோம். அத்துடன் கடலூர், நாகப்பட்டினம் போன்ற சிறிய துறைமுகங்களிலுள்ள வசதிகளையும் அபிவிருத்தி செய்ய வேண்டியதவசியம். அதற்காக மூன்றாவது திட்டத்திலே நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தியுடன் இணைந்திருப்பது சேது சமுத்திரத் திட்டம். இன்றைக்கு இந்தியாவுக்கு மேற்குப் பகுதியிலிருந்து கிழக்குப் பக்கம் வரக்

கூடிய கப்பல்கள் எல்லாம் இலங்கையைச் சுற்றிக்கொண்டு தான் வரவேண்டியிருக்கிறது. சேது சமுத்திரத் திட்டம் அமைப்பதன்மூலம் இலங்கைக்கும், இந்தியாவுக்கும் மத்தியிலே இருக்கக்கூடிய கடல் வழியாகக் கப்பல்கள் செல்ல ஏற்பாடு செய்ய முடியும். இதைப்பற்றி ராமசாமி முதலியார் அவர்களின்கீழ் அமைக்கப்பட்ட குழு முன்பே ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்திருக்கிறது. இத் திட்டம் பற்றிய இறுதியான முடிவு எடுக்குமுன் இன்னும் சில புள்ளி விவரங்கள் தேவையாக இருக்கின்றனவென்பதை உணர்ந்து, மேலும் சில பரிசீலனைகள் இப்போது நடைபெற்று வருகின்றன. ராமசாமி முதலியார் குழுவில் பணியாற்றிய கேப்டன் டேவிஸ் என்ற கடல்துறை நிபுணர் சமீபத்தில் மறுபடியும் நம் நாட்டுக்கு வந்து, இந்தப் பரிசீலனைகள் நடக்க வேண்டிய முறையை வகுத்துக் கொடுத்துச் சென்றிருக்கிறார். சேது சமுத்திரத் திட்டம் உருவாவதன் மூலமாகத்தான் தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தியும் நல்ல முறையிலே மேலும் பயன்பட முடியும். நம்முடைய கடலோரக் கப்பல் போக்குவரத்தையும் பெரிய அளவில் அபிவிருத்தி செய்யமுடியும். ஆகவே சேது சமுத்திரத் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவதற்குத் தொடர்ந்து முயற்சிகள் செய்யப்படும்.

28. தொழிற் பெருக்கம் ஏற்படுகின்ற நாடுகளில் எல்லாம் நகரங்களில் மக்கள் எண்ணிக்கை பெருமளவில் அதிகரிப்பதைக் காண்கின்றோம். புதிய நகரங்களும் இத் தொழில்களையொட்டி ஏற்படுகின்றன. இதே அனுபவம் தான் நமக்கும் ஏற்பட்டுள்ளது. நகரங்களில் மக்களுடைய எண்ணிக்கை நாளுக்குநாள் பெருகிக்கொண்டே வந்துள்ளது. இதன் காரணமாக மக்கள் வாழ்வதற்கு வசதியான வீட்டு வசதிகள் இல்லாத நெருக்கடி ஏற்பட்டுள்ளது. இதைத் தவிர்ப்பதற்குப் புதிய வீடுகள் போதிய அளவிற்குக் கட்டப்பட வேண்டியதவசியம். வீடுகளைப் பெரும்பாலும் தனிப்பட்டவர்கள்தான் எடுத்துக் கட்டுவது முறை. நம் ராஜ்யத்திலும் தனிப்பட்டவர்கள் பல ஆயிரக்கணக்கான புதிய கட்டிடங்களைக் கட்டி முடித்துள்ளார்கள். இருப்பினும் சில முக்கியப் பகுதிகளில் சர்க்காரும் இத் திட்டத்தில் ஈடுபட வேண்டியது அவசியமென்பதை உணர்ந்து இரண்டு திட்டக் காலத்திலும் இப்பணி மேற்கொள்ளப்பட்டுள்ளது. அதிலும் முக்கியமாக சர்க்கார் பணியில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பது சர்க்காருடைய பொறுப்பாக ஏற்படுகிறது. அந்த முறையில் முதற்படியாகப் போலீசாருக்கு வீடு கட்டும் திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இதுவரையிலும் 3,500-க்கு மேற்பட்ட வீடுகள் 2·5 கோடி ரூபாய் செலவில் கட்டி முடிக்கப் பட்டுள்ளன. மேலும் 3 அல்லது 4 கோடி ரூபாய் அளவிற்குச்

வீட்டு வசதி.

செலவு செய்வதன் மூலமாகத்தான் போலீஸ் படையினருக்கு வேண்டிய தேவையைப் பூர்த்திச் செய்ய முடியும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட முடிவிற்குள்ளாக 80 சத விகிதம் போலீசாருக்கு வீடு கட்டிக் கொடுக்க வேண்டுமென முடிவு செய்துள்ளோம். இதற்கான நிதி, திட்டச் செலவிற்குப் புறம்பாக ஒதுக்கப்படும்.

திட்டத்திற்கு உட்பட்டும் பல வீடு கட்டும் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. முதலாவது திட்டக் காலத்தில் மொத்தம் 128 லட்சம் ரூபாய் இத்துறையில் செலவழிக்கப் பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் 535 லட்சம் ரூபாய் செலவாகியுள்ளது. இவைகளில், குறைந்த வருமானம் பெறுகின்றவர்களுக்காக வீடு கட்டும் திட்டத்தில் 283 லட்சம் ரூபாயும், சேரிச் சீரமைப்புத் திட்டத்தின்கீழ் 135 லட்சம் ரூபாயும், தொழிலாளர்களுக்கு வீடுகள் அமைக்கும் திட்டத்தின்கீழ் ரூ 106 லட்சமும் செலவழிக்கப் பட்டது.

நகரங்களில் மனைக்கட்டுகளின் விலை மேலும் மேலும் உயர்ந்து கொண்டே போகக்கூடிய நிலை ஏற்பட்டுள்ளது. பல இடங்களில் மூன்று, நான்கு ஆண்டுகளுக்குள்ளாக விலை இரண்டு மடங்குக்கு மேல் உயர்ந்துவிட்டிருக்கிறது. இதன் காரணமாகப் பல வீடு கட்டும் திட்டங்களை எடுத்துக்கொள்ள முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது. இதைத் தவிர்க்க வேண்டுமானல் வீடு கட்டுவதற்குத் தகுதியான நிலங்களைப் பெருமளவில் ஆர்ஜிதம் செய்து நியாயமான விலைக்கு விற்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இவ்வாறு வாங்கக் கூடிய நிலங்களை நகரத்திற்குள்ளாக வாங்காமல் நகரத்திற்கு சுற்றுப்புறமுள்ள பகுதிகளிலே வாங்கி அங்குப் பல வசதிகளை ஏற்பாடு செய்து கொடுப்பதன் மூலமாகத்தான் மனைக்கட்டு களின் விலையேற்றத்தைத் தவிர்க்க முடியும். மூன்ருவது திட்டத்தில் இதற்கு முக்கிய இடம் கொடுக்கப்பட்டி ருக்கிறது. 1961-62-ல் இத்திட்டத்தை அமுல் நடத்து வதற்காக 1 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. சென்னை நகரின் அருகாமையில் சுமார் 3,000 ஏக்கர் வரை இத் திட்டத்தின்கீழ் ஆர்ஜிதம் செய்ய ஏற்பாடு செய்யப்படும். வீடு கட்டும் திட்டங்களை நல்ல முறையில் நடத்துவதற்காக ஒரு புதிய சட்டமும் சமீபத்திலே நிறைவேற்றப் பட்டுள்ளது.

**கிராமக் குடிசைத் தொழில்கள் —கைத்தறி.**

29. யந்திரத் தொழில்கள் அமைப்பில் நாம் அதிகக் கவனம் செலுத்தி வரும் அதே காலத்தில் கிராமக் குடிசைத் தொழில் களுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்திருக்கின்ருேம். பெருமளவில் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கக்கூடிய கட்டத்தில் அதிக முதலீடு செய்ய வேண்டிய அவசியம்

25th February 1961] [Sri C. Subramaniam]

இல்லாத சிறு கைத்தொழில்களின் மூலம்தான் வேலை வாய்ப்பைப் பெரிய அளவில் ஏற்பாடு செய்ய முடியும். இந்த மாநிலத்தில் தொன்று தொட்டுக் கைத்தறி நெசவுத் தொழில் நம் பொருளாதார அமைப்பில் ஒரு முக்கியப் பங்கை வகித்து வருகின்றது. தற்போது 4·6 லட்சம் கைத் தறிகள் சுமார் 16 லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. இந்தத் தொழில் நசித்துப் போகாமல் காப்பதற்கும் பல வகைகளில் மேலும் அபிவிருத்தி செய்வதற்கும் மத்திய சர்க்காரும், மாநில சர்க்காரும் தொடர்ந்து பல நடவடிக்கைகளை எடுத்து வருகின்றனர். முக்கியமாகக் கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கைத்தறி நெசவுத் தொழிலுக்குப் பல புதிய வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் மேலும் கைத்தறிகளைக் கூட்டுறவு இயக்கத்தின்கீழ்க் கொண்டு வருவதற்கு முயற்சி எடுத்து வருகிறோம். 2·1 லட்சம் கைத்தறிகள் தற்போது கூட்டுறவு இயக்கத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டுள்ளன.

(At this stage Mr. Speaker occupied the chair)

சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில், கைத்தறி நெசவுத் தொழிலுக்கு, விற்பனையின்பேரில் கழிவு கொடுப்பதன் மூலம் சலுகை கொடுக்கும் திட்டத்திற்குத்தான் முக்கிய இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது திட்டக் காலத்தில் மட்டும், 4 கோடி ரூபாய் கழிவுத் தொகையாகக் கொடுக்கப்பட்டது. வெறும் சலுகைகள் கொடுப்பதுடன் மட்டும் நின்று விடாமல், கைத்தறி நெசவுத் தொழிலின் எதிர்காலத்தை நல்ல முறையிலே நிர்ணயித்து எந்தவிதமான மாறுதல்கள் இத் துறையில் ஏற்பட வேண்டுமோ அந்த மாறுதல்களைக் காலாவட்டத்தில் ஏற்படுத்துவதற்கு வகை செய்யவேண்டும். இயந்திர சக்தி பெருகிக் கொண்டு வருகின்ற காலத்தில் கைத்தறி நெசவுத் தொழிலுக்கு இடமுண்டா என்ற பிரச்சினை மிகவும் சிக்க லானது. எவ்வாறு இருப்பினும் சில விசேஷ ரகங்களைப் பொறுத்த வரையில் கைத்தறியின் மூலமாகத்தான் அவைகளை உற்பத்தி செய்ய முடியும் என்பதில் ஐயமில்லை. ஆனால் சாதாரண ரகங்களைப் பொறுத்த வரையில் இயந்திரப் போட்டி மேலும் மேலும் வலுப்பட்டுக்கொண்டு போகும் என்பதை நாம் உணர வேண்டும். தற்போது இருக்கக் கூடிய நிலையில் லட்சக்கணக்கான நெசவுத் தொழிலாளர் களுக்கு மாற்று வேலை-வாய்ப்புகள் கொடுக்கக்கூடிய நிலை இல்லாவிட்டாலும், மேலும் மேலும் யந்திரத் தொழில்கள் வளருகின்ற காலத்தில் இத்தொழில்களில் கைத்தறி நெசவுத் தொழிலாளர்களும் இடம் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை. அதுவுமல்லாமல் இன்றைக்கு இருக்கக்கூடிய தலைமுறை மக்கள் கைத்தறி நெசவுத் தொழிலைத் தொடர்ந்து நடத்தலாம். ஆனால், நெசவாளர் குடும்பத்திலுள்ள

[Sri C. Subramaniam] [25th February 1961

இளைஞர்கள் படித்துக் கல்வியறிவு பெற்றவர்களாக முன் வரும்போது இந்தத் தொழிலைத் தொடர்ந்து நடத்துவார்களா என்பதையும் நாம் யோசிக்க வேண்டியிருக்கிறது. சிறிது சிறிதாகக் கைத்தறிகளுக்குப் பதிலாக விசைத் தறிகளை உபயோகப்படுத்த ஆரம்பிப்பது சிறந்ததென்கின்ற கருத்து, பிரச்சினையை, இந்த அடிப்படையில் நோக்கு கின்றவர்கள் மத்தியில் இப்போது பரவி வருகிறது. இவ்வாறு விசைத்தறிகளைப் பயன்படுத்தத் தொடங்கினால் அதன் பயனாகக் கைத்தறி நெசவாளர்கட்கு வேலை இல்லாமற் போய்விடும் என்ற அச்சம் ஏற்படலாம். ஆனால் விசைத் தறிகள் அமைக்கையில் கைத்தறி நெசவுக் கூட்டுறவுச் சங்கங்களின் அடிப்படையில் ஏற்பாடு செய்தால் அதன் மூலம் கைத்தறி நெசவாளர்களுக்கு வேலையில்லாது போகின்ற நிலையையும் தடுக்க முடியும். அதே சமயத்தில் விசைத்தறி உபயோகிப்பதன் மூலமாகக் கிடைக்கக்கூடிய அதிக ஊதியத்தை ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் இருக்கக்கூடிய எல்லாக் கைத்தறி நெசவாளர்களும் பங்கிட்டுக்கொள்ள முடியும் என்கின்ற நிலையும் ஏற்படலாம். இதுபற்றி, பழைய கருத்துக்களிலேயே நிலைத்து, தொழிலைத் தேங்கச் செய்துவிடாமல் பார்த்துக் கொள்வது அவசியமென்பதை எல்லோரும் உணர வேண்டும். இதற்கிடையில் கைத்தறி நெசவாளர்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கு எல்லாவித நடவடிக்கைகளையும் எடுப்பது அவசியமாகின்றது. இந்த அடிப்படையில்தான் பல திட்டங்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. தொடர்ந்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் அப் பணிகள் நடைபெற இருக்கின்றன. நெசவாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டப்படி, இரண்டாவது திட்டக் காலத்தில் 54·59 லட்சம் ரூபாய் செலவில் 1,600 வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த வசதியை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலும் பெருக்க வேண்டியது அவசியம்.

பல சமயங்களில் கைத்தறி நெசவாளர்களுக்கு நியாய மான விலையில் நூல் கிடைக்காமற் போய்விடுகிறது. இக் குறையை நீக்குவதற்குக் கூட்டுறவு நூல் மில்கள் அமைக்கப் பட்டு வருகின்றன. திருநெல்வேலிக்கருகாமையில் உள்ள பேட்டையில் அமைக்கப்பட்டிருக்கும் கூட்டுறவு நூல் மில்லில் உற்பத்தி ஆரம்பமாகிவிட்டது. கூட்டுறவு நூல் மில்கள் ராமநாதபுரம், திருச்செந்தூர் ஆகிய ஊர்களிலும் கட்டப்பட்டு வருகின்றன. இவ்வாண்டு ஏப்ரல், மே மாதங்களில் அவைகளில் உற்பத்தி தொடங்குமென எதிர் பார்க்கலாம். இன்னும் சில முக்கிய இடங்களில் கூட்டுறவு நூல் மில்களை அமைப்பதற்கு முயற்சி நடைபெற்று வருகின்றது.

25th February 1961] [Sri C. Subramaniam]

30. கதர் உற்பத்தி, தமிழ் நாட்டுப் பொருளாதாரத்தில் வேலை-வாய்ப்புக்களை ஏற்படுத்திக் கொடுப்பதில் ஒரு பெரும் பங்கை வகித்து வருகிறது. வேறு தொழில்களிலே ஈடுபட்டுப் போதிய ஊதியம் சம்பாதிக்கக்கூடிய வேலை-வாய்ப்புக்கள் ஏற்படுகின்ற வரையில் கதர் இயக்கம் பல லட்சக்கணக்கான மக்களுக்கு வாழ்க்கை நடத்துவதற்கு உதவி வருகின்றது. முதல் திட்ட ஆரம்ப காலத்தில் 26,500 பேர்கள் கதர் நூல் நூற்கும் தொழிலில் ஈடுபட்டிருந்தார்கள். இரண்டாவது திட்டக் காலத்தில் அந்த எண்ணிக்கை 181,000 அளவுக்கு உயர்ந்துள்ளது. மூன்றாவது திட்டக் காலத்தில் மேலும் 45,000 மக்களுக்கு இத் திட்டத்தில் நூல் நூற்கும் வேலை கொடுக்க ஏற்பாடு செய்துள்ளோம். கதர்த்துணி நெய்கின்றவர்களுடைய எண்ணிக்கையும் இதே அடிப்படையில் உயர்ந்திருக்கிறது. முதல் திட்ட ஆரம்பத்தில் 716 நெசவாளர்கள் இருந்ததற்குப் பதிலாக இரண்டாவது திட்ட முடிவிற்குள் 9,000 நெசவாளர்கள் இப் பணியில் ஈடுபட்டுள்ளார்கள். மூன்றாவது திட்ட முடிவிற்குள் இந்த எண்ணிக்கை 15,000-க்கு உயரலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. கதர் போர்ட் மூலம் சர்க்கார் நடத்தக்கூடிய திட்டத்தைத் தவிர்த்து, தமிழ் நாடு சர்வ சேவா சங்கத்தினரும் இத் திட்டத்தை ஏற்று, கதர் உற்பத்தியைச் செய்து வருகின்றனர். இதன் மூலம் லட்சக் கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைத்து இருக்கிறது. கதர்த்துணி உற்பத்தியும் இந்த அளவிற்கு உயர்ந்து கொண்டே வந்துள்ளது. வருடம் ஒன்றுக்கு 164 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள 66 லட்சம் கெஜம் துணி உற்பத்தியாகிக் கொண்டிருந்ததற்குப் பதிலாக இப்போது 2 கோடி ரூபாய் மதிப்புள்ள 80 லட்சம் கெஜம் துணி உற்பத்தியாகி வருகிறது. அத்துடன் உற்பத்தியாகின்ற அளவிற்கு விற்பனையாவதற்கும் முயற்சி எடுக்கப்பட்டு வருகின்றது. பழைய ராட்டைகளுக்குப் பதிலாக, அம்பர் ராட்டை வழங்கப்பட்டு நூல் உற்பத்திப் பெருக்கமும் ஏற்பட்டுள்ளது. கதர்த் திட்டம்.

31. மக்களின் வாழ்க்கைத் தர உயர்வு பொருளாதார வளர்ச்சி அடிப்படையில்தான் ஏற்படும். பொருளாதார வளர்ச்சி, மக்களின் தரத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆகவேதான் நாட்டின் முன்னேற்றத் திட்டத்தில் கல்வித் துறை ஒரு முக்கியமான இடத்தைப் பெறுகின்றது. எந்த அளவிற்கு மக்களுடைய அறிவு வளர்ச்சி அடைகின்றதோ, அந்த அளவிற்கு நாட்டின் முன்னேற்றம் வேகமாகவும், ஸ்திரமாகவும் ஏற்பட முடியும். கல்வி.

நம் நாட்டிலுள்ள பல பிரச்சினைகளுக்கு முக்கிய காரணம் மக்களில் பெரும் பகுதியினர் கல்வி கற்காமல் இருந்ததேயாகும். இக்குறைையை நீக்குவதற்காகச், சென்ற

பத்தாண்டுகளாகப் பெரு முயற்சி எடுத்து வந்திருக்கின்றோம். அதன் பயனாக தமிழ் நாட்டில் முன்பிருந்த 16,000 ஆரம்பப் பள்ளிகளுக்குப் பதிலாக இன்றைக்கு 26,700 பள்ளிக்கூடங்கள் இயங்கி வருகின்றன. முதல் திட்டக்கால ஆரம்பத்தில் 6 வயதிலிருந்து 11 வயதுக்குட்பட்ட குழந்தைகளில் 45 சத விகிதத்தினரே பள்ளிகளுக்குச் சென்று வந்தார்கள். இப்போது 75 சத விகிதத்தினர் பள்ளிக்குச் செல்கின்றனர். முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் கல்வி அபிவிருத்திக்காக 5 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் 12 கோடி ரூபாய் அதற்காக செலவழிக்கப்பட்டது. மூன்றாவது திட்டத்தில் 25·4 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இவ்வாண்டு முடிவிற்குள் 300 ஜனத்தொகைக்கு மேலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் பள்ளிக்கூடம் அமைக்கப்பட்டுவிடும். இவ்வாறு குழந்தைகள் சௌகரியமாகக் கல்வி பெறப் பள்ளிகள் அமைப்பதுடன் ஏழைக் குழந்தைகளைப் பள்ளிக் கூடத்திற்குக் கொண்டுவந்து சேர்ப்பதற்கு வேறு பல முயற்சிகளும் செய்து வந்திருக்கின்றோம். முக்கியமாக மதிய உணவுத் திட்டத்தின் மூலம் ஏழைக் குழந்தைகளைப் பெரிய அளவில் பள்ளியில் கொண்டுவந்து சேர்க்க முடிகிறது. மூன்றில் ஒரு பங்கு மாணவர்களுக்கு மதிய உணவுத் திட்டத்தின் மூலம் உணவு அளிப்பது அவசியமாகிறது. தற்போது சுமார் 10 லட்சம் குழந்தைகள் இத் திட்டத்தின்கீழ் பயன்பெற்றுள்ளார்கள். 1957-58-ல் இதற்காக சர்க்கார் செலவு 7 லட்சம் ரூபாய் அளவில் இருந்தது. நடைமுறை ஆண்டில் 84 லட்சம் ரூபாய் செலவாகும். 1961-62-ம் ஆண்டில் 135 லட்சம் ரூபாய் இதற்கென ஒதுக்கப்பட்டுள்ளது. மதிய உணவுத் திட்டத்திற்கு ஆகக்கூடிய செலவில் 60 சத விகிதந்தான் சர்க்காரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. பாக்கியுள்ள தொகையை அந்தந்தக் கிராமங்களிலுள்ள மக்களே ஏற்றுக்கொள்கின்றனர். பரவலாக நடைபெற்று வருகின்ற இத்திட்டத்தில் ஆங்காங்குச் சில குறைகள் தோன்றுவது இயற்கையே. குறைகளை ஆராய்ந்து நீக்குவதற்காக அசெம்பிளி அங்கத்தினர்கள் கொண்ட ஒரு குழு நியமிக்கப்பட்டுள்ளது. இதனுடைய அறிக்கை சீக்கிரத்திலே சர்க்காருக்குச் சமர்பிக்கப்படுமென எதிர்பார்க்கிறேன். கல்வித் துறையில் இன்னொரு முக்கியத் திட்டம் பள்ளிச் சீரமைப்புத் திட்டம். இதன் மூலமாகப் பொதுமக்கள் பள்ளிகளின் பல்வேறு வசதிகளைப் பெருக்குவதற்காக இதுவரை—இதுவரை என்று சொல்லும்போது சுமார் பத்துப் பதினைந்து நாட்களுக்கு முன்பாக—சுமார் 3·79 கோடி அளவிற்குப் பணமாகவும், பொருளாகவும் உதவியுள்ளார்கள். இந்த இயக்கம் இன்னும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இன்னும் பல கோடிக் கணக்கான ரூபாய் அளவிற்கு பல வசதிகள் பள்ளிகளுக்குச் செய்து கொடுக்கப்படுமென எதிர்பார்க்கிறோம்.

25th February 1961] [Sri C. Subramaniam]

ஆசிரியர்கள் எந்த அளவிற்கு நல்ல முறையில் பணியாற்றுகின்றார்களோ அந்த அளவிற்குத்தான் கல்வி வெற்றி பெற முடியும். ஆசிரியர்களுக்குப் போதிய ஊதியம் கொடுக்கப் படாத காரணத்தால் தொடர்ந்து அவர்களிடத்திலே அதிருப்தி வளர்ந்து கொண்டிருந்தது. இக்குறைகளை நீக்கக் கூடிய முறையில், பல சலுகைகள், தொடர்ந்து ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்பட்டு வந்துள்ளன. ஓய்வுச் சம்பளம், ஆசிரியர்களின் குழந்தைகளுக்கு இலவசக் கல்வி போன்ற சலுகைகளோடு மட்டுமல்லாமல் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுக்கு இரண்டாவது திட்டக் காலத்தில் முதற்படியாக மாதம் ஒன்றுக்கு 17 ரூபாய் ஊதிய உயர்வு கொடுக்கப் பட்டது. பின்னர்ச் சம்பளக் குழு நியமிக்கப்பட்டபொழுது ஆசிரியர்களுடைய ஊதியத்தையும் பரிசீலனை செய்து சிபாரிசு செய்ய வேண்டுமென ஏற்பாடு செய்தோம். சம்பளக் கமிஷன் செய்துள்ள சிபாரிசுகள் முழுவதையும் ஒப்புக்கொண்டு ஆசிரியர்களுக்கு நல்ல முறையில் ஊதிய உயர்வு கொடுக்கப்பட்டது. சம்பள உயர்வு வழங்கியதன் மூலம் மட்டும் வருடம் ஒன்றுக்கு 4 கோடி ரூபாய் அளவிற்குச் செலவு அதிகரித்துள்ளது. இதன் காரணமாக ஆசிரியர்கள் ஓரளவு மனத்திருப்தியுடன் சிறந்த பணியாற்றக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டிருப்பது நம் எல்லோராலும் வரவேற்கக் கூடியதே.

மூன்றாவது திட்டக் காலத்தில் நிறைவேற்ற வேண்டிய முக்கியமான ஒரு திட்டம் 6 வயதிலிருந்து 11 வயதுக்குள் இருக்கக்கூடிய எல்லாக் குழந்தைகளையும், பள்ளிகளில் கொண்டுவந்து சேர்ப்பது. இதற்கு ஆரம்பமாக நம்முடைய ராஜ்யத்தில் நடப்பு ஆண்டிலேயே மூன்றில் ஒரு பங்கு ஆறு, ஏழு வயதுக் குழந்தைகள் எல்லோரையும் பள்ளிக் கூடத்தில் கட்டாயமாகக் கொண்டுவந்து சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. தமிழ் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் 1962-63-க்குள் இத் திட்டம் விஸ்தரிக்கப் படும்.

1965–66-ம் ஆண்டுக்குள்ளாக 6 வயது முதல் 11 வயதுக்குள் இருக்கக்கூடிய எல்லாக் குழந்தைகளையும் பள்ளிக் கூடத்திற்குக் கொண்டுவந்து சேர்த்துவிட முடியும் என எதிர்பார்க்கிறோம். இந்த இலக்கை அடைவதற்கு அடுத்த ஐந்து ஆண்டுக்குள்ளாக 14 லட்சம் குழந்தைகளைப் புதிதாகப் பள்ளிக்கூடத்திற்குக் கொண்டுவந்து சேர்ப்பது அவசியமாகிறது. இவர்களுக்காக 31 ஆயிரம் புதிய வகுப்புகளும், 31 ஆயிரம் ஆசிரியர்களும் நியமிக்க வேண்டியிருக்கிறது. இத் திட்டத்திற்காக மட்டும் 11·5 கோடி ரூபாய் செலவாகும். 1961–62-ல் இதற்காக 70 லட்சம் ரூபாய் செலவழிக்கப் படும். அதிகக் குழந்தைகள் பள்ளிக்கூடத்திற்கு வந்து சேரச் சேர மதிய உணவுத் திட்டத்தையும் அந்த அளவிற்கு விரிவாக்க வேண்டியிருக்கிறது.

[Sri C. Subramaniam] [25th February 1961

ஆரம்பக் கல்விப் பொறுப்பு முழுவதும் பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்கப்பட்டு, அதற்கான நிதி வசதியும் பஞ்சாயத்து யூனியன்களுக்குச் செய்து கொடுக்கப்படும். 1961-62-ல் 2·5 கோடி ரூபாய் நில வரியிலிருந்து ஒதுக்கப் படுவதையும் சேர்த்து 4·9 கோடி ரூபாய் பஞ்சாயத்து யூனியன்களுக்கு இவ்வகையில் மானியமாக வழங்கப்படும்.

உயர்தரப் பள்ளியில் கல்வியின் தரத்தை உயர்த்துவதற் காகப் பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வந்திருக் கின்றன. இரண்டாவது திட்டக் காலத்தில் 164 பள்ளிகள் பல்நோக்குப் பள்ளிகளாக மாற்றப்பட்டன. மூன்றுவது திட்டக் காலத்தில் 150 Bifurcated Courses 52 லட்சம் ரூபாய் செலவில் ஆரம்பிக்கப்படும். உயர்நிலைப் பள்ளிகளை மேல் உயர்நிலைப் பள்ளிகளாக மாற்றும் திட்டமும் அமுல் நடத்தப்படும்.

அரசினர் கல்லூரி ஆசிரியர்கட்குச் சம்பள வீதங்களை உயர்ந்த வேண்டுமெனச் சம்பளக் கமிஷன் சிபார்சு செய்தது. அந்தச் சிபார்சை அரசினர் ஏற்றுள்ளதைக் கனம் அங்கத் தினர்கள் அறிவார்கள். அதே சம்பள வீதங்களைத் தனியார் கல்லூரி ஆசிரியர்கட்கும் வழங்க முடிவு செய்யப்பட்டுள்ளது. இதனுல் ஏற்படும் அதிகச் செலவில் ஒரு பங்கைப் பல்கலைக் கழக மானியக் கழகத் திட்டத்தின்படி இந்த அரசாங்கமே ஏற்றுக்கொள்ளும். இவ்வகையில் ஆண்டுதோறும் அரசினர் வழங்க வேண்டிய மானியத் தொகை 15 லட்சம் ரூபாயாகும். மூன்றுண்டுப் பட்டப் படிப்பை அமுலுக்குக் கொண்டு வருவ தால் தனியார் கல்லூரிகளுக்கு ஏற்படும் முதலீட்டுச் செல வினங்கட்காக மானியம் வழங்கவும் தீர்மானித்துள்ளோம்.

தமிழ் மூலம் கற்பிப்பதற்கு வேண்டிய பாடப் புத்தகங் களைத் தயாரிக்கும் பணியில் கல்லூரித் தமிழ்க் குழுவினர் நல்ல முன்னேற்றம் கண்டிருக்கின்றனர். அவர்கள் முயற்சியின் பயனுகத் தமிழில் பல பாடப் புத்தகங்கள் வெளிவந்துள்ளன.

சென்னை நூலகச் சட்டத்தின் பிரகாரம் தோன்றிய பல நூலகங்கள் நன்கு பணியாற்றி வருகின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் மத்திய நூலகங்கள் தோற்றுவிக்கப்பட் டுள்ளன. 1953-54-ல் இருந்த ஒரு கிளை நூலகத்திற்குப் பதிலாக இப்பொழுது 473 கிளை நூலகங்களும் 1,000 பேருக்கு மேலுள்ள கிராமங்கட்கு நூல்களைக்கொண்டு சென்று வழங்கும் 606 வழங்கும் இடங்களும் ஏற்பட்டுள்ளன. நூலகங்களில் படிக்கச் சென்றவர்களின் மொத்த எண்ணிக்கை 1953-54-ல் 25 லட்சமாக இருந்தது 1959-60-ல் 167 லட்சமாக உயர்ந்துள்ளது.

25th February 1961] [Sri C. Subramaniam]

மொத்தமாகக் கல்வித்துறைக்கு 1956-57-ல் 12 கோடி ரூபாய் செலவாயிற்று. 1961-62-ல் இந்தச் செலவு 20 கோடி ரூபாய் அளவில் இருக்கும்.

32. மருத்துவ, சுகாதாரத் துறைகளில் பல திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வந்திருக்கின்றன. கிராமங்களில் குடிநீர் வசதி செய்து கொடுப்பதற்காக 4·27 கோடி ரூபாயும், நகரங்களில் குடிநீர் வசதிக்காக 7·47 கோடி ரூபாயும் சென்ற இரண்டு திட்டக் காலங்களில் செலவிடப்பட்டுள்ளது. கிராமங்களில் 14,000 புதிய கிணறுகள் வெட்டப்பட்டதுடன் 340 இணைக்கப்பட்ட குடிநீர்த் திட்டங்களும் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. மூன்றாவது திட்டக் காலத்தில் 2,500 புதிய கிணறுகள் வெட்டவும், 216 இணைக்கப்பட்ட குடிநீர்த் திட்டங்களை நிறைவேற்றவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஆற்றோரங்களில் அமைந்துள்ள கிராமங்களுக்குக் குடிநீர் வசதியும் சுகாதார வசதியும் செய்யும் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகின்றது. இத் திட்டத்தின்கீழ் 417 கிராமங்களுக்குக் குடிநீர் வசதியும், 396 கிராமங்களுக்குச் சாக்கடை வசதியும் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. முதல் திட்ட ஆரம்பகாலத்தில் 28·78 லட்சம் மக்களுக்கு 38 நகரங்களில் குடிநீர் வசதி செய்து கொடுக்கப்பட்டது. இரண்டாவது திட்ட முடிவிற்குள் 33 லட்சம் மக்களுக்கு 64 நகரங்களில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதி செய்யப்படும். மூன்றாவது திட்டக் காலத்தில் மேலும் 43 முனிசிபாலிட்டிகளுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் இந்த வசதி ஏற்படும். தொழில் பெருகிவரும் நகரங்களில் குடிநீர் வசதியைப் போதுமான அளவு பெருக்குவதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கும். சாக்கடை வசதிகளை மூன்றாவது திட்டக் காலத்தில் விரிவாக எடுத்துக்கொள்ள உத்தேசித்துள்ளோம். நகரங்களில் குடிநீர்த் திட்டங்களுக்காகவும், சாக்கடைத் திட்டங்களுக்காகவும் இரண்டாவது திட்டக் காலத்தில் 6 கோடி ரூபாய் செலவிடப்பட்டது. மூன்றாவது திட்டக் காலத்தில் 7·5 கோடி ரூபாய் செலவழிக்கத் தீர்மானித்துள்ளோம்.

மருத்துவம், சுகாதாரம்.

சென்னை நகரத்தின் குடிநீர், சாக்கடைப் பிரச்சினைகளைத் தனிப்பட்ட முறையில் கவனிக்க வேண்டியிருக்கிறது. சுமார் 1 கோடி ரூபாய் இரண்டாவது திட்டக் காலத்தில் இந்த வகைக்காகச் செலவழிக்கப்பட்டது. சென்னை நகரத்தில் குடிநீர் வசதியைப் பெருக்குவதற்காக இன்னும் பல திட்டங்களை நிறைவேற்ற வேண்டியிருக்கிறது. மூன்றாவது திட்டக் காலத்தில் இத் திட்டங்களுக்காக 5 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. 1961-62-ல் 90 லட்சம் ரூபாய் செலவழிக்கப்படும்.

[Sri C. Subramaniam] [25th February 1961

சென்னை, கோயம்புத்தூர், மதுரை போன்ற நகரங்களின் பிரச்சினைகளை நல்ல முறையில் ஆராய்ந்து அவைகளுக்குத் தீர்வு காணத் திட்டமிடுவது அவசியம். தொழில்வளம் பெருகுகின்ற இந் நகரங்களில் போதுமான அளவு குடிநீர் வசதியும், சுகாதார வசதிகளும் ஏற்பாடு செய்தாக வேண்டும். அத்துடன் மேலும் பல பெருந் தொழில்கள் இந் நகரங்களுக்கு அருகாமையிலேயே ஏற்பட்டுப் பல புதிய நெருக்கடிகள் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டுவதும் அவசியம். இந் நகரங்களின் வளர்ச்சிக்காக இணைக்கப்பட்ட திட்டங்களை வகுத்து அவைகளைப் படிப் படியாக நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுக்கப்படும்.

மலேரியா, ஆனைக்கால் வியாதி, அம்மை நோய் போன்ற தொத்து வியாதிகளை அறவே ஒழிப்பதற்கான திட்டங்களும் நிறைவேற்றப்பட்டு வந்திருக்கின்றன. மக்களிடையே சுகாதார முறையில் நல்ல பழக்க வழக்கங்களை ஏற்படுத்துவதன்மூலந்தான் வியாதிகள் வராது தடுக்க முடியும். முக்கியமாகக் கிராமப் பகுதிகளில் கண்ட இடங்களில் மலஜலங்களைக் கழிக்காமல் கக்கூசுகளில் மலஜலங்களைக் கழிப்பதற்கான ஏற்பாட்டைச் செய்யவேண்டும். இந்தப் பழக்கத்தை மக்களிடையே வளர்ப்பதற்காகக் கிராமங்களிலே கக்கூசுகள் அமைக்க வேண்டும். முக்கியமாக எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் இந்த வசதியை ஏற்படுத்திக் குழந்தைப் பருவத்திலேயே இந்தப் பழக்கம் ஏற்படும்படிச் செய்வதன் மூலம் நல்ல பலன் கிடைக்கும். இதற்காக 2 லட்சம் ரூபாய் 1961-62-ம் ஆண்டுக்கான பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

முதல் திட்ட ஆரம்ப காலத்தில் நம் ராஜ்ய ஆஸ்பத்திரிகளில் 12,000 படுக்கை வசதிகள்தான் இருந்தன. இப்போது 21,500 படுக்கை வசதிகள் ஏற்பட்டுள்ளன. டாக்டர்கள் போதுமான அளவுக்குக் கிடைப்பதற்காக இரண்டு புதிய வைத்திய கல்லூரிகள் இரண்டாவது திட்டக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. தற்போது முன்பிருந்ததைவிட அதிகமான டாக்டர்கள் பட்டம் பெற்று வந்தாலும் கூடக் கிராமங்களில் பணியாற்ற டாக்டர்கள் கிடைப்பது அரிதாக இருக்கிறது. டாக்டர்களைக் கிராமங்களுக்குச் செல்ல வைப்பதற்காகப் பல சலுகைகள் வழங்கப்பட்டுள்ளன. சமுதாய நல வளர்ச்சி வட்டாரங்களில் நல்ல மாதிரியாக சுகாதார நிலையங்கள் அமைக்கப்பட்டு அங்கு டாக்டர்கள் பணியாற்றுவதற்காகக் குடியிருப்பு வசதிகள் செய்யப்பட்டு வருகின்றன. வைத்திய வசதிக்காக 1961-62-ல் 1,81 லட்சம் ரூபாய் செலவிட உத்தேசிக்கப்பட்டுள்ளது. பல ஆஸ்பத்திரிகளுக்குப் புதிய கட்டிட வசதி செய்து கொடுப்பதற்கு அடுத்த ஆண்டில் ஏற்பாடு செய்யப்படும். சேலத்திலுள்ள பெரிய

25th February 1961] [Sri C. Subramaniam]

ஆஸ்பத்திரியில் மேலும் 80 படுக்கைகள் கொண்ட ஒரு வார்டு கட்டப்படும். போளூர், பவானி, பரமக்குடி ஆகிய இடங்களில் 32 படுக்கைகள் கொண்ட புதிய ஆஸ்பத்திரிகள் கட்டப்படும். பொள்ளாச்சி, சிதம்பரம் ஆகிய இடங்களில் 100 படுக்கைகள் கொண்ட புதிய கட்டிடங்கள் உருவாகும். விழுப்புரம், செஞ்சி, ஸ்ரீபெரும்புதூர், தாராபுரம், குளித்துறை, பத்மநாப புரம், ஆத்தூர், மன்னார்குடி, மாயவரம், திருவாரூர், திருத் துறைப்பூண்டி, பட்டுக்கோட்டை, சீர்காழி, செங்கோட்டை, அம்பாசமுத்திரம், தென்காசி, சங்கரன்கோயில், கோயில் பட்டி, திருத்தணி ஆகிய இடங்களில் அரசாங்க ஆஸ்பத்திரி களில் மேலும் 32 படுக்கைகள் கட்ட ஏற்பாடு செய்யப்படும். மேற்கண்ட கட்டிடத் திட்டங்களுக்கு மட்டும் 35 லட்சம் ரூபாய் செலவாகும்.

குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தில் நாம் முக்கிய கவனம் செலுத்தி வந்திருக்கின்றோம். முக்கியமாக, அறுவை சிகிச்சை மூலம் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தை அமுல் நடத்த முயற்சி எடுத்துக்கொண்டுள்ளோம். மக்களிடையே செய்த பிரசாரங்களின் காரணமாகவும், மேலும் மேலும் அதிக மக்கள் இத் திட்டத்தினுடைய நன்மைகளை உணர்ந்து இத் திட்டத்தில் பங்குகொள்ள முன் வருவது நமக்கு நம்பிக்கையூட்டுவதாக இருக்கிறது. மூன்றாவது திட்டக் காலத்தில் இதற்கென 1,61 லட்சம் ரூபாய் ஒதுக்கப்படும்.

தொழிலாளர் இன்ஷூரன்ஸ் திட்டமும் சென்ற பத்தாண்டு களில் பெரிய அளவில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. இதற்காக அடுத்த ஆண்டு பட்ஜெட்டில் 26·85 லட்சம் ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது. நம் ராஜ்யம் முழுவதிலும் சுமார் 2 லட்சம் தொழிலாளர்கள் இதன் பயனைப் பெற்றுள்ளார்கள்.

கெஜட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களுக்கு இலவச வைத்திய வசதிக்கான சலுகை கொடுக்கப்பட்டுள்ளது. இருப்பினும் இந்த வசதியை நல்ல முறையிலே பயன் படுத்திக்கொள்ள முடியவில்லை என்கின்ற புகார் இருந்து கொண்டிருக்கிறது. இதைத் தவிர்ப்பதற்காக முக்கிய ஆஸ்பத்திரிகளில் அரசாங்க ஊழியர்களை மட்டும் கவனித்து வைத்திய சிகிச்சை கொடுக்கத் தனிப்பட்ட டாக்டர்களை நியமிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு உள்ளது. 1961-62-ல் சென்னை ஜெனரல், ஸ்டான்லி, கஸ்தூரிபா ஆகிய ஆஸ்பத்திரிகளில் இது அமுலுக்கு வரும். மேலும் தஞ்சாவூரிலும் மதுரையிலும் அரசாங்க ஊழியர்கட்குப் பயன்படும் பிரத்தியேக மருத்துவமனைகள் திறக்கப்படும். எல்லா முக்கிய நகரங்களிலும் இத் திட்டம் படிப்படியாக அமுலுக்கு வரும்.

பின்தங்கிய வகுப்பினர்.

33. சமுதாயத்தில் பின்தங்கிய மக்களை முன்னேற்றுவதற்காகத் தொடர்ந்து பல திட்டங்களை நிறைவேற்றி வந்திருக்கிறோம். பொதுவாக நாட்டில் நடைபெறும் முன்னேற்றத் திட்டங்களின் பலனை எல்லா மக்களும் பெறுகின்றனர். இருப்பினும் பின்தங்கிய மக்களுக்குச் சிறப்பாகச் சில திட்டங்களை மேற்கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. கல்வித் துறையில், சம்பளச் சலுகைகள் கொடுத்தும், இலவச உணவு வசதிகள் செய்து கொடுத்தும், மாணவர்கள் கல்வியறிவு பெறுவதற்கான வசதி செய்து கொடுத்தும் வந்திருக்கிறோம். 30,000-க்கு மேற்பட்ட ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த மாணவர்களும் பின்தங்கிய வகுப்பைச் சேர்ந்த மாணவர்களும் தற்போது இந்தச் சலுகைகளைப் பெற்று வருகின்றார்கள். 1950-51-ம் ஆண்டில் நமது ராஜ்யம் பிரிக்கப்படாமல் இருந்தபோது ஹரிஜன நலனுக்காக 69 லட்சம் ரூபாயே செலவாயிற்று. தற்போது நம்முடைய ராஜ்யத்தில் 3,55 லட்ச ரூபாய் இத் துறைக்காக இவ்வாண்டு செலவிடப்பட்டுள்ளது. சம்பளச் சலுகைகள் தொடர்ந்து மூன்றாவது திட்டக்காலத்திலும் திட்டச் செலவுக்குப் புறம்பாக வழங்கப்படும். அந்த அடிப்படையில் வருடா வருடம் செலவாகி வரும் 2·22 கோடியுடன் 1961-62-ல் திட்டத்தின் கீழ்ச் செலவிடப்படும் 84 லட்சம் ரூபாயும் சேர்ந்து மொத்தம் 3,06 லட்சம் ரூபாய் ஹரிஜன நலனுக்காகச் செலவிடப்படும். இதற்கு மேலும் நிதி தேவைப்படுமானால் அதற்கு வேண்டிய அளவிற்கு நிதி ஒதுக்கப்படும். ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டமும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

1959-60 கணக்குகள்.

34. 1959-60 திருத்த மதிப்பீட்டின்படி வருவாய் ரூ 78,30 லட்சமாகவும், செலவு ரூ 77,72 லட்சமாகவும், உபரி ரூ 58 லட்சமாகவும் இருக்கும் என எதிர்பார்த்தோம். 1959-60-க்குரிய கணக்குகள் இப்பொழுது கிடைத்துள்ளன. அதன்படி வருவாய் ரூ 81,11 லட்சமாகவும், செலவு ரூ 80,58 லட்சமாகவும், உபரி ரூ 53 லட்சமாகவும் உள்ளன. ரெவின்யூ வருவாயில் கிடைத்த ரூ 2,81 லட்சம் அதிகரிப்பைச் செலவுக் கணக்கில் ஏற்பட்டுள்ள ரூ 2,86 லட்சம் அதிகரிப்புச் சரிக்கட்டி விட்டது. ரெவின்யூ அதிகரிப்பு, பெரும்பாலும் பொது விற்பனை வரி (ரூ 1,09 லட்சம்), நில வரி (ரூ 50 லட்சம்), மோட்டார் வண்டி வரி (ரூ 31 லட்சம்), முத்திரைத்தாள்கள் (ரூ 75 லட்சம்) என்பன போன்ற மாநில வரி இனங்களிலேயே ஏற்பட்டுள்ளது. செலவின அதிகரிப்பு, பெரும்பாலும், கல்வி (ரூ 36 லட்சம்), மருத்துவம் (ரூ 32 லட்சம்) ஹரிஜன முன்னேற்றம் (ரூ 53 லட்சம்), சீரியல் பணிகள் (ரூ 60 லட்சம்) போன்ற அபிவிருத்தித் துறைகளிலேயே ஏற்பட்டுள்ளது.

ஆண்டு முடிவில் ரொக்கக் கையிருப்பு ரூ 4,42 லட்சம் ஆகும்.

35. சென்ற வரவு-செலவுத் திட்ட அறிக்கையில், நடப்பு ஆண்டில், செலவு ரூ 81,21 லட்சமாகவும், வரவு ரூபாய் 80,87 லட்சமாகவும், ஆகவே பற்றுக்குறை ரூபாய் 34 லட்சமாகவும் இருக்குமெனக் கூறியிருந்தேன். அந்தத் திட்ட மதிப்பீட்டில் சென்னைச் சம்பளக் கமிஷனின் சிபாரிசுகளை நிறைவேற்றுவதற்குரிய தொகை ஒதுக்கப்படவில்லை. திருத்த மதிப்பீட்டில், சம்பளக் கமிஷன் சிபார்சுகளை நிறைவேற்றுவதற்காக, நடைமுறை ஆண்டில் ஒன்பது மாதங்களுக்கு ரூ 3,70 லட்சம் செலவாகுமென நிதி ஒதுக்கம் செய்யப்பட்டிருக்கிறது. சம்பளக் கமிஷன் காரணமாக ஏற்பட்ட செலவு அதிகரிப்புப் போக, பெரும்பாலும் அபிவிருத்தித் துறையில் ரூ 3,15 லட்சம் அதிகச் செலவு ஏற்பட்டுள்ளது. நடைமுறை ஆண்டின் திருத்த மதிப்பீடு, ரெவின்யூக் கணக்கில் ரூ 89,29 லட்சம் வருவாய் என்றும், செலவு ரூ 88,06 லட்சம் என்றும் உபரி ரூ 1,23 லட்சம் என்றும் காட்டுகிறது. மத்திய வரி வருமானத்தில் நம் பங்கு, மதிப்பீட்டில் கண்டுள்ளதைக் காட்டிலும் ரூ 2,45 லட்சம் அதிகமாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த அதிகரிப்பில் ரூ 2,32 லட்சம், வருமான வரியில் உள்ள பங்காகும். மாநில வரிகளில், பொது விற்பனை வரி (ரூ 1,58 லட்சம்), மத்திய விற்பனை வரி (ரூ 40 லட்சம்), மோட்டார் எண்ணெய் வரி (ரூ 20 லட்சம்), மோட்டார் வண்டி வரி (ரூ 62 லட்சம்), முத்திரைத்தாள்கள் (ரூ 55 லட்சம்), நில வரி வருமானம் (ரூ 21 லட்சம்) என்ற முறையில் ரூ 3,80 லட்சம் அதிக வருமானம் ஏற்பட்டுள்ளது. காடுபடு பொருள்களின்மூலம் ரூ 54 லட்சம் அதிக வருமானம் ஏற்பட்டுள்ளது. 1960-61 திருத்த மதிப்பீடு.

முன்னரே குறிப்பிட்டுள்ளபடி, சம்பளக் கமிஷன் சிபாரிசுகள் காரணமாக ஏற்பட்ட அதிகரிப்பு ஒரு புறம் இருக்க, திட்ட வேலைகளை மேலும் துரிதப்படுத்தியதன் காரணமாகவும் அபிவிருத்தித் துறையில் அதிகச் செலவு ஏற்பட்டுள்ளது. இச் செலவு விபரம் வருமாறு : கல்வி, ரூ 76 லட்சம் ; மருத்துவம், ரூ 38 லட்சம் ; பொதுச் சுகாதாரம், ரூ 68 லட்சம் ; சமுதாய வளர்ச்சி, ரூ 41 லட்சம் ; ஹரிஜன நலத்துறை, ரூ 50 லட்சம் ; கட்டடப் பணிகள், ரூ 99 லட்சம். கிராமப் பஞ்சாயத்துக்கள் வசூலிக்கும் வீட்டு வரிக்கு இணையாக மானியம் கொடுக்கும் முறையில் ரூ 30 லட்சமும், பஞ்சாயத்து யூனியன்களுக்கு ஸ்தல சாலை அபிவிருத்தி மானியமாக ரூ 11 லட்சமும் கொடுப்பதற்குத் திருத்த மதிப்பீடு நிதி ஒதுக்கம் செய்துள்ளதையும் இங்கே குறிப்பிட வேண்டும். நடைமுறை ஆண்டில், மேற்கண்ட

இரண்டு இனங்களுக்காக அடையாள நிதி ஒதுக்கமே செய்யப்பட்டுள்ளது. ஸ்தல அபிவிருத்தி வேலைகளுக்காக நடப்பு ஆண்டில் ரூ 63 லட்சம் செலவு செய்யப்படும்.

மூலதனச் செலவு 1960-61.

36. 1960-61 மூலதனச் செலவு ரூ 10,86 லட்சம் ஆகும் என்று மதிப்பிட்டிருந்தோம். ஆனால் இப்பொழுது இந்தச் செலவு ரூ 15,49 லட்சம் அளவில் இருக்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. ஆகவே அதிகப்படி செலவு ரூ 4,63 லட்சம் ஆகலாம். பரம்பிக்குளம் திட்டத்திற்கு ரூ 1,22 லட்சமும், ஜமீன் ஒழிப்புக்கு ரூ 34 லட்சமும் சென்னை மாநிலக் கூட்டுறவு மத்திய பாங்கின் பங்கு மூலதனத்தில் பங்கெடுத்துக்கொள்ள ரூ 65 லட்சமும் ஒதுக்கியதே அதிகரிப்புக்குக் காரணமாகும். திட்ட மதிப்பீட்டில் 82 பஸ்களை வாங்குவதற்காக நிதி ஒதுக்கம் செய்து இருந்த தற்குப் பதிலாக, 157 பஸ்கள் வாங்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டிருப்பதால் பஸ் போக்குவரத்துத் துறையில் மேலும் ரூ 22 லட்சம் ஒதுக்கியுள்ளோம். ரசாயன உரத் திட்டம் காரணமாக இந்திய அரசாங்கத் திற்குப் பழைய பாக்கியைச் செலுத்தும் முறையில் ரூபாய் ஒரு கோடி அதிகமாக ஒதுக்கப்பட்டுள்ளது. மூலதனச் செலவு பற்றி நிதி நிலைக் குறிப்பீட்டில் விரிவான விவரம் கொடுக்கப்பட்டுள்ளது. மின்சார அபிவிருத்திச் செலவே மூலதனச் செலவின் முக்கிய பகுதி. இது மாநில மின்சார போர்டின் கணக்கில் காட்டப்படுகிறது. நடைமுறை ஆண்டில் மதிப்பீட்டில் ஒதுக்கப்பட்ட ரூ 12 கோடிக்குப் பதிலாக ரூ 14 கோடி செலவு ஆகலாம். மாநில மின்சார போர்டுக்கு ரூ 8,88 லட்சம் கடனை வழங்கத் திருத்த மதிப் பீட்டில் நிதி ஒதுக்கம் செய்துள்ளோம்.

பொதுமக்களிடமிருந்து ரூ 12 கோடி அளவுக்குக் கடன் எழுப்பியுள்ளோம். நடைமுறை ஆண்டில் வழி-வகை நிலை திருப்திகரமாகவே இருந்து வருகிறது. ஆண்டு முடிவில் முதல் மதிப்பீட்டில் எதிர்பார்த்த ரூ 4,50 லட்சத்திற்குப் பதிலாக ரொக்கக் கையிருப்பு ரூ 5,12 லட்சமாக இருக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

1961-62 வரவு-செலவுத் திட்டப்படி ரெவின்யூக் கணக்கில் வருவாய் ரூ 87,50 லட்சமாகவும், ரெவின்யூக் கணக்கில் செலவு ரூ 90,35 லட்சமாகவும் இருக்குமென மதிப்பிடுகிறோம். இதன்படி ரூ 2,85 லட்சம் ரெவின்யூக் கணக்கில் துண்டு விழுகிறது. 1960-61 திருத்த மதிப் பீட்டின்படி கிடைக்கும் எல்லா வகை வருவாய்களையும் கணக்கிட்டு, அதனோடு ஒப்புநோக்கும்பொழுது வருவாய்ப் பகுதியில் ரூ 1,79 லட்சம் குறைவு காண்கிறது. மாநில, மத்திய வரிகளில் ரூ 71 லட்சம் அதிகமாகக் கிடைக்கிறது;

இதற்கு எதிராக வரிகள் போக மற்ற வருவாய்கள் ரூ 2,50 லட்சம் அளவு குறைவுபடுகின்றது. குறைந்த சம்பளம் பெறும் ஊழியர்களின் சம்பள விகிதத்தை அதிகப்படுத்து வதற்காக மத்திய அரசாங்கத்தார் ரூ 2,34 லட்சம் மானியமாக அளித்துவந்தார்கள். அடுத்த ஆண்டிலிருந்து இந்த மானியத்தை நிறுத்திவிட்ட காரணத்தாலேயே வரி போக மற்ற வருவாய்களில் குறைவு ஏற்படுகிறது.

37. 1961-62 ரெவின்யூக் கணக்கில் ரூ 90,35 லட்சம் செலவாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. நடைமுறை ஆண்டில் எதிர்பார்க்கும் செலவைவிட இது ரூ 2,29 லட்சம் அதிகம் ஆகும். அதிகரிப்பின் முக்கியப் பகுதிகள், கல்வி ரூ 3,19 லட்சம்; விவசாயம் ரூ 87 லட்சம்; கூட்டுறவு ரூ 28 லட்சம்; உதவி மானியங்கள் ரூ 63 லட்சம்; ஸ்தல அபிவிருத்தி வேலைகள் ரூ 77 லட்சம்; சமுதாய வளர்ச்சி ரூ 35 லட்சம் என்பன ஆகும். 1960-61 திருத்த மதிப்பீட்டுக்கும் 1961-62 திட்ட மதிப்பீட்டுக்கும் உள்ள வேறுபாடுகளை நிதி நிலைக் குறிப்பில் விரிவாக ஆராய்ந்துள்ளோம். 1961-62 மதிப்பீடு.

38. 1961-62-ல் மூலதனச் செலவு ரூ 18,10 லட்சம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஜமீன்தாரி முறை ஒழிப்புக்கு ஈடாக ரூ 81 லட்சம்; பரம்பிக்குளம் திட்டத்திற்கு ரூ 3,77 லட்சம்; பிற பாசனத் திட்டங்களுக்கு ரூ 43 லட்சம்; விசேஷ சிறிய பாசனத் திட்டத்திற்கு ரூ 1,46 லட்சம்; குளங்கள் தூர்வாரி, நில மீட்புச் செய்யும் திட்டங்களுக்கு ரூ 15 லட்சம்; தொழில் வளர்ச்சிக்கு ரூ 3,01 லட்சம்; பெருமளவில் நில ஆர்ஜிதம் செய்வதற்கு ரூ 1,00 லட்சம்; சாலைகள், கட்டிடங்கள் ஆகியவற்றைக் கட்டுவதற்கு மூலதன முதலீடாக ரூ 4,73 லட்சம்; பஸ் போக்குவரத்துக்கு (Road Transport) ரூ 1,01 லட்சம்; கிராமங்களுக்குத் தண்ணீர் வழங்கும் திட்டத்திற்கு ரூ 30 லட்சம் முதலியவை முக்கிய செலவினங்களாகும். 1961-62-ல் மின்சார உற்பத்திக்கு முதலீடு ரூ 15,41 லட்சமெனத் தற்போது முடிவு செய்யப்பட்டுள்ளது. மின்சார போர்டுக்கு ரூ 7,84 லட்சம் கடனாக வழங்குகிறோம். செலவின் எஞ்சிய பகுதியை அந்த போர்டு தன்னுடைய வருமானத்திலிருந்தே செய்து கொள்ளும். மூலதனச் செலவு 1961-62.

39. 1961-62-ல் கடன்களும் முன்பணங்களும் என்ற வகைக்கு ரூ 21,36 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. அதில் மின்சார போர்டுக்கு ரூ 7,84 லட்சம் கடனாகவும், சென்னை மாநகராட்சி மன்றத்திற்கு ரூ 1,17 லட்சமும், நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு ரூ 1,06 லட்சமும், பல்வேறு ஸ்தல ஸ்தாபனங்கள் ஏற்றுள்ள குடிநீர் வழங்கல், சாக்கடை கட்டும் கடன்களும் முன்பணங்களும்.

[Sri C. Subramaniam] [25th February 1961

திட்டங்களுக்கு ரூ 1,33 லட்சமும், விவசாயிகளுக்கு ரூ 2,87 லட்சமும், தொழில் துறைகளுக்கு மாநில உதவியாக ரூ 51 லட்சமும், கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்திற்கு ரூ 31 லட்சமும், வீடுகட்டும் திட்டத்திற்கு ரூ 1,00 லட்சமும், சமுதாய வளர்ச்சிக்கு ரூ 84 லட்சமும் ஒதுக்கப்பட்டுள்ளன.

ஆதாரங்கள். 40. 1961-62-ல் ரூ 3,82 லட்சம் பொதுக் கடனைத் திருப்பித்தரவேண்டும். இதில் இந்த மாநில அரசாங்கத்தின் பொறுப்பு ரூ 1,97 லட்சமாகும். எஞ்சிய பகுதி ஆந்திரப் பிரதேசம், கேரளம், மைசூர் ஆகிய மாநிலங்களின் பொறுப்பு ஆகும். முதலீட்டுச் செலவை உத்தேசித்து அடுத்த ஆண்டில் ரூ 10 கோடி பொதுக் கடன் எழுப்ப முடிவு செய்துள்ளோம். 1961-62 இறுதியில் 78 லட்சம் ரூபாய் ரொக்கக் கையிருப்பு இருக்குமென எதிர்பார்க்கப் படுகிறது. ஆகவே வழிவகையில் துண்டு விழாத முறையில் வரவு-செலவுத் திட்டம் அமைக்கப்பட்டுள்ளது.

சலுகைகள். 41. புதிய விற்பனை வரிச் சட்டத்தில் ஆண்டுதோறும் ரூ 10,000 முதல் ரூ 25,000 வரை விற்பனை செய்பவர்களுக்கு, விரிவான கணக்கு வைக்காமல் உத்தேச மதிப்பின் பேரில் மொத்தமாக வரி செலுத்தக்கூடிய சலுகை ஒன்றைக் கொடுத்திருந்தோம். நடைமுறையில் ஏற்படுகின்ற அனுபவத்தைக்கொண்டு, இந்தச் சலுகையை விரிவு படுத்துவதைப்பற்றி ஆராய்வோம் என்று அத்துறை அமைச்சர் உறுதியளித்திருந்தார். அதற்கிணங்க, ஏற்பட்ட பரிசீலனையின் பேரில், ஆண்டு விற்பனை ரூ 50,000 வரை உள்ளவர்கட்கும் இச்சலுகையை வழங்க அரசாங்கம் முடிவு செய்துள்ளது. யார் யார் இந்தச் சலுகைக்குரியவர்கள் என்பது நடப்பு ஆண்டுக் கணக்கு அடிப்படையில் முடிவு செய்யப்படும்.

இலவசக் கல்வி. 42. ஐந்தாவது வகுப்பு வரை இலவசமாக அனைவருக்கும் கல்வியளிக்கும் திட்டம் அமுலிலிருந்து வருகிறது. எட்டாவது வகுப்புவரை ஏழை மாணவர்கட்குச் சம்பள விலக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. அதற்கு மேல் வகுப்புகளில் பயிலக் கூடிய பள்ளி மாணவர்களில், ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கும், சமுதாயத்தில் பின்தங்கிய மற்றப் பகுதியினருக்கும், சம்பளச் சலுகைகள் கொடுக்கப்பட்டு வந்துள்ளன. இந்தச் சலுகைகள் சாதி அடிப்படையில் இல்லாமல் பொருளாதார அடிப்படையில் அமையவேண்டு மென்ற கருத்துச் சில காலமாகவே வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. அந்த அடிப்படையில் 11-வது வகுப்புவரை எல்லா ஏழை மாணவர்கட்கும், சாதி, சமய வேறுபாடின்றி, இலவசக் கல்வி கொடுப்பதென அரசாங்கம் முடிவுசெய்துள்

ளது. (ஆரவாரம்) இச்சலுகையின் காரணமாக ஆண்டொன்றுக்கு 58 லட்சம் ரூபாய் அதிகச் செலவு ஏற்படும் எனக் கணக்கிடப்பட்டு, அதற்கான நிதியும் ஒதுக்கப்பட்டுள்ளது. தகுதி பெற்ற மாணவர்கள் யாராக இருந்தாலும் வறுமையின் காரணமாகக் கல்வி பெற முடியவில்லை என்ற நிலையை நீக்குவதில், நாம் எடுத்திருக்கும் முடிவு, முதற்படியாகும்.

ஐந்தாண்டு திட்டங்கள்.

43. இந்த பட்ஜெட்டில் திட்டத்திற்காக ஒதுக்கப் பட்டுள்ள நிதி பற்றிச் சிறிது கூற விரும்புகிறேன். தமிழ் நாட்டின் இரண்டாம் திட்ட அளவு 152 கோடி ரூபாயாக முதலில் நிர்ணயிக்கப்பட்டிருந்தது. முதல் நான்கு ஆண்டுகளில் மட்டும் திட்டச் செலவு 1,42·76 கோடி ரூபாயாக இருந்தது. நடைமுறையாண்டின் திருத்த மதிப்பீட்டின்படி செலவு 43·43 கோடி ரூபாயாகவும் மொத்தச் செலவு 1,86·19 கோடி ரூபாயாகவும் இருக்கும்.

| | (ரூபாய் கோடிக் கணக்கில்.) |
|---|---|
| 1956-57 .. .. .. .. | 28·67 |
| 1957-58 .. .. .. .. | 30·25 |
| 1958-59 .. .. .. .. | 34·61 |
| 1959-60—(கணக்குகள்) .. .. | 39·89 |
| (குந்தா உதவி) .. .. | 9·34 |
| மொத்தம் .. | 1,42·76 |
| 1960-61 (திருத்த மதிப்பீடு) .. | 43·43 |
| பெரு மொத்தம் .. | 1,86·19 |

முதலில் ஏற்றுக்கொண்ட இலக்கைவிட 34 கோடி ரூபாய் அதிகச் செலவு செய்து இரண்டாவது திட்டத்தை மிக வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ளோம். தேவையான நிதி ஆதாரங்களைச் சேகரிப்பதற்குத் தீவிர முயற்சி எடுத்துக் கொண்டமையாலும் முன்னேக்குடன் நிர்வாக யந்திரத்தை இதற்கு ஏற்பச் சீரமைப்புச் செய்தமையாலும் இந்த அளவு வெற்றியைப் பெற முடிந்தது. இரண்டாந் திட்டத்தில் இந்த மாநிலத்தில் திரட்ட வேண்டி இருந்த ரூ 13 கோடிக்குப் பதிலாக 20 கோடி ரூபாய் திரட்டினோம். எதிர்பார்த்ததற்கு மேலாகவே பொதுக் கடனையும் எழுப்பியுள்ளோம். இந்த அனுபவங்களைக் கொண்டு மூன்ருவது திட்டத்தை இன்னும் நல்ல முறையில் நிறைவேற்ற முடியும் என்று நம்ப இடமிருக்கிறது.

இந்த மாநிலத்தின் மூன்ருந் திட்ட அளவு 2,91 கோடி ரூபாய் என்று முடிவு செய்யப்பெற்றுள்ளது. மொத்தத் தொகையில் 16 சத வீதம், அதாவது ரூ 46 கோடி ரூபாய்

முதலாண்டின் இலக்காக இருக்கவேண்டும் எனத் திட்டக் கமிஷன் கூறியுள்ளார்கள். ஆயினும் பல்வேறு வளர்ச்சித் துறைகளின் திட்டச் செலவுகளுக்காக 48 கோடி ரூபாய் பட்ஜெட்டில் ஒதுக்கியுள்ளோம். இரண்டாந் திட்டத்தில் தொடங்கப்பட்ட புதிய பணிகளைப் பராமரிப்பதற்கு 7 கோடி ரூபாய் வேண்டி இருக்கும். பராமரிப்புக்குரிய இந்தச் செலவையும் சேர்த்துக்கொண்டால் புதிய வளர்ச்சிப் பணி களுக்கு 55 கோடி ரூபாய் செலவாகும். நடப்பு ஆண்டில் திட்டச் செலவுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள 43·43 கோடி ரூபாயுடன் இதை ஒப்பிட்டால் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றம் நன்கு விளங்கும்.

முடிவுரை.

44. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்ற, நிதி வசதிகளைப் போதிய அளவில் திரட்டுவது மிக அவசியம். நம் ராஜ்யத் திட்டம் மட்டும் 2,91 கோடி ரூபாய் அளவில் அமைக்கப்பட்டுள்ளது. ஆனல் இத் திட்டம் தேசீயத் திட்டத்தின் ஒரு பகுதியே என்பதை நாம் உணர வேண்டும். சென்னை அரசாங்கத்தின் பல்வேறு திட்டங்கள் ஒரு புறமிருக்க, மத்திய அரசினராலும் பல பணிகள் நம் ராஜ்யப் பகுதியிலே நிறைவேற்றப்பட இருக்கின்றன. அது மட்டுமல்லாமல் தனியார் துறையிலும் பல தொழில்கள் அமைக்கத் திட்டமிடப்படுகின்றது. இவற்றின் பயனுக நாட்டின் உற்பத்திச் சக்தி கணிசமான அளவில் பெருகி, மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும்போதுதான் சமுதாயத் திலே இன்று காணப்படுகின்ற குறைகளும் ஏற்றத் தாழ்வு களும் நீங்க வழி ஏற்படும். நம் நாடோ வறுமை மிகுந்த நாடு. அன்ருட வாழ்க்கை நடத்துவதே பெரும் பகுதியினருக்குக் கஷ்டமாக உள்ளது. அதனுல் அவர்கள், சேமிக்கும் சக்தியற்றவர்களாக உள்ளார்கள். பெரும் அளவில் மூலதனம் திரட்டுவதன் மூலந்தான் அவர்களுடைய வாழ்க்கை நிறைவு பெறும் முறையில் திட்டங்களை நிறை வேற்ற முடியும். வறுமையின் காரணமாக மூலதனம் சேர்க்க முடிவதில்லை. மூலதனம் போதிய அளவு இல்லாத தால் வறுமை தொடர்ந்து நீடிக்கிறது. இப்பயங்கரச் சுழலில் இருந்து தப்ப, சேமிப்பு ஒன்றுதான் சிறந்த வழி. இன்று சிக்கனமாக வாழ்ந்து, சேமிப்பு முழுவதையும் திட்டங் களில் முதலீடு செய்வதன் மூலம்தான், நாளை நம் சந்ததியார் வளமும் வசதியும் பெற்று நல் வாழ்வு வாழ அடிகோல முடியும். ஜனநாயக அடிப்படையில் இயங்கும் நாட்டில் வரி மூலம் நிதி திரட்டுவதற்கு ஓர் எல்லையுண்டு. ஆனல் மக்களின் சேமிப்பைக் கடனுகப் பெற்று முன்னேற்றத் திட்டங்களில் முதலீடு செய்வது அரசாங்கத்திற்கும் எளிது; நாட்டின் வளர்ச்சியில் நேரடியான பங்கு கொள்ள மக்க ளுக்கும் நல்லதொரு வாய்ப்பாகும். மக்கள் தங்கள் நிதியை வீண் செலவில் விரயமாக்காமல், இவ்வாறு சேமித்துக்

25th February 1961] [Sri C. Subramaniam]

காப்பதன் மூலம் நாடும் வளர்கிறது, மக்கள் நிதியும் பெருகுகிறது. சென்னை அரசாங்கம் இதுவரை எழுப்பியுள்ள பொதுக் கடன்களுக்கெல்லாம் மக்களிடையே சிறந்த ஆதரவு கிடைத்துள்ளது. பெரிய முதலீடு செய்ய வசதியுடைய ஒரு சிலர் மட்டுமின்றிச் சிறு வருவாய் உள்ள எண்ணற்ற மக்களுக்கும் இம்மகத்தான முயற்சியில் பங்கு கொள்ள வாய்ப்பு அளிக்கும் நோக்கத்துடன்தான் சிறு சேமிப்பு, பரிசுப் பத்திரம் போன்ற திட்டங்களில் நாம் தீவிரக் கவனம் செலுத்தி வருகின்றோம்.

இதில் எந்த அளவிற்கு வெற்றி காண்கிறோமோ அந்த அளவிற்கு, நாம், தற்போது ஏற்றுக் கொண்டிருக்கும் திட்ட இலக்குகளை மட்டுமல்ல, அதற்கு மேலும் சாதித்து, வெற்றி காண முடியும். இம்முயற்சியை கட்சிப் பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்ட ஒரு பொது முயற்சியாகக் கொண்டு, இச் சபை அங்கத்தினர்கள் அனைவரும் இப்பெரும் பணியில் முழு மனதுடன் ஒத்துழைப்பார்கள் என்ற நம்பிக்கையுடன் எனது உரையை முடிக்க விரும்புகிறேன். (பெரும் ஆரவாரம்).

MR. SPEAKER: மார்ச் மாதம் இரண்டாம் தேதி காலை 10-00 மணி வரை இந்தச் சபையை ஒத்திவைக்கிறேன். 10–20 a.m.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A.—*Statutory Rules and Orders*

*Nil.*

### B. REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.

* 62. *Finance Accounts of the Government of Andhra Pradesh for the year* 1958–59 *and the Audit Report* 1959.

* 63. *Appropriation Accounts of the Government of Andhra Pradesh for the year* 1958–59 *and the Audit Report* 1960.

64. *Budget Speech (English and Tamil).*

65. *Detailed Estimates of Revenue.*

66. *Introduction to the Budget (English and Tamil).*

67. *Government Commercial Undertakings.*

68. *Detailed Civil Works Budget.*

69. *Detailed Irrigation Budget.*

70. *Demands for Grants and Detailed Budget Estimate.*

71. *Notice of Demands for Grants for the year* 1961–62 *(English and Tamil).*

72. *Plan Supplement—Third Five-Year Plan Programme for* **1961–62.**

73. *Budget Memorandum (English and Tamil).*

74. *Annual Finance Statement (English and Tamil).*

---

* Kept in the Library.

## Appendix I.

[Vide answer to starred question No. 476 asked by Sri N. K. Palanisami, Sri A. A. Rasheed and Sri M. P. Sarathi at the meeting of the Legislative Assembly held on 25th February 1961 on page 503 supra.]

On seeing the Press Report, dated 3rd October 1960, that the locust swarm has come down as far as Guntur district in Andhra Pradesh, circular instructions were issued by the Director of Agriculture to all the District Agricultural Officers of border districts in this State for organizing proper precautionary measures against the possible locust swarm into this State. Leaflets also have been distributed to all the District Agricultural Officers for distribution to the ryots on the characteristics of the pest and the heavy havoc that would be caused by this pest and exhorting them, therefore, to co-operate with Government officials in putting down this pest in case of invasions. All the Plant Protection Officers have been alerted in this regard and instructions were issued to form special mobile squads especially in the border districts. Sufficient stock of pesticides like BHC 10 per cent, Folidol, etc., have also been stocked in all agricultural depots. Instructions were also issued to all the Block Development Officers to alert the Gramasevaks to be on constant vigil and to organize control measures whenever called for at short notice. The Collectors of the districts were also requested to render all possible help and to issue suitable instructions to all the Revenue officials to arrange for the announcement through the beat of tom tom in the villages about the nature of this pest and control measures necessary.

2. All the District Agricultural Officers and the Plant Protection staff were instructed to send information about the incidence of this pest immediately on sighting anywhere in this State. No reports have so far been received from any of the officers regarding the prevalence of this pest in this State. The Directors of Agriculture of Andhra Pradesh, Orissa and Mysore have been addressed so as to ascertain the possible movement of this pest.

3. Regarding the Red Hairy Caterpillar pest, this pest had attacked the groundnut crop in Chellampatti, Usilampatti. Sedapatti, Dharmathupatti and other areas of Madurai district and Pudupatti of Ramanathapuram district. All possible steps to control this pest have been taken by the department by stocking adequate quantities of pesticides, sprayers and dusters in all agricultural depots. Besides concessional sale of pesticides has been resorted to on the representation from Pudupatti village about the large-scale attack of this pest.

4 The District Agricultural Officers, Madurai, Dindigul and Sattur, have been sanctioned a sum of Rs. 10,000, Rs. 10,000 and Rs. 3,000 respectively, for the issue of pesticides at concessional rates as a special case since such concessions are normally available to food crops only.

Mainly owing to the delayed action on the part of the agriculturist in Usilampatti area in tackling this pest at the vulnerable stage and the unwillingness on the part of a number of ryots to adopt the departmental recommendations, the control measures actually carrried out have become ineffective. Good progress was shown wherever there was public co-operation in controlling this pest.

The area affected has been approximately estimated at 6 to 10 per cent and the loss in crop has been estimated approximately at 2 per cent.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 489 asked by Sri K. R. Viswanathan at the meeting of the Legislative Assembly held on 25th February 1961, page 514 supra.]

Statement showing the particulars of Mudi tickets sold in the ten Saturdays following Annual festivals during the years 1957 to 1960, in respect of Sri Kaliyugavaradarajaperumal temple, Kallankurichi, Udayarpalayam taluk, Tiruchirappalli district. (Cost of each Mudi ticket 37 naye paise).

| *Year.* | *First Saturday.* | *Second Saturday.* | *Third Saturday.* | *Forth Saturday.* | *Fifth Saturday.* | *Sixth Saturday.* |
|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| 1957 .. | 727 | 618 | 505 | 370 | 285 | 273 |
| 1958 .. | 204 | 227 | 716 | 613 | 293 | 192 |
| 1959 .. | 490 | 318 | 288 | 240 | 202 | 132 |
| 1960 .. | 488 | 663 | 1,050 | 1,080 | 698 | 602 |

| *ear.* | *Seventh Saturday.* | *Eighth Saturday.* | *Ninth Saturday.* | *Tenth Saturday.* | *Total number of tickets sold.* | *Amount realised.* | |
|---|---|---|---|---|---|---|---|
| | (8) | (9) | (10) | (11) | (12) | (13) | |
| | | | | | | RS. | NP. |
| 1957 .. | 206 | 181 | 111 | 65 | 3,341 | 1,252 | 88 |
| 1958 .. | 268 | 206 | 162 | 106 | 2,987 | 1,120 | 12 |
| 1959 .. | 186 | 98 | 76 | 59 | 2,089 | 783 | 37 |
| 1960 .. | 623 | 448 | 328 | 169 | 6,149 | 2,305 | 88 |

25th February 1961]

## APPENDIX III.

[Vide answer to starred question No. 490 asked by Sri K. R. Viswanathan at the meeting of the Legislative Assembly held on 25th February 1961, page 514 supra.]

*Statement showing the annual expenditure and surplus income for the years 1957 to 1960.*

| — | *Fasli* 1366. | | *Fasli* 1367. | | *Fasli* 1368. | | *Fasli* 1369. | |
|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | | (3) | | (4) | | (5) | |
| | RS. | NP. | RS. | NP. | RS. | NP. | RS. | NP. |
| Actual income .. | 1,56,375 | 30 | 1,43,902 | 25 | 1,62,689 | 30 | 1,62,438 | 92 |
| Expenditure .. | 80,625 | 20 | 87,152 | 49 | 87,750 | 64 | 1,11,174 | 87 |
| Balance .. | 75,750 | 10 | 56,749 | 76 | 74,938 | 66 | 51,264 | 05 |
| Reserve Fund .. | 29,500 | 00 | 35,000 | 00 | 35,000 | 00 | 45,000 | 00 |
| Surplus.. .. | 46,250 | 10 | 21,749 | 76 | 39,938 | 66 | 6,264 | 05 |

*Statement showing the particulars of hundial collections in the ten Saturdays following annual festivals during the years 1957 to 1960 in respect of Sri Kaliyugavaradarajaperumal temple, Kallankurichi, Udayarpalayam taluk, Tiruchirappalli district.*

| *Year.* | *First Saturday.* | | *Second Saturday.* | | *Third Saturday.* | | *Fourth Saturday.* | | *Fifth Saturday.* | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | | (3) | | (4) | | (5) | | (6) | |
| | RS. | NP. | RS. | NP. | | | RS. | NP. | RS. | NP. |
| Hundial collections — | | | | | | | | | | |
| 1957 | 1,816 | 17 | 1,705 | 66 | 1,632 | 07 | 277 | 67 | 1,048 | 18 |
| 1958 | 650 | 06 | 796 | 77 | 1,992 | 83 | 1,973 | 57 | 1,215 | 71 |
| 1959 | 2,030 | 12 | 1,576 | 61 | 1,256 | 54 | 1,338 | 62 | 835 | 06 |
| 1960 | 1,306 | 13 | 1,843 | 30 | 2,633 | 44 | 3,513 | 09 | 2,740 | 87 |

| *Year.* | *Sixth Saturday.* | | *Seventh Saturday.* | | *Eighth Saturday.* | | *Ninth Saturday.* | | *Tenth Saturday.* | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | (7) | | (8) | | (9) | | (10) | | (11) | |
| | RS. | NP. | RS. | NP. | RS. | NP. | RS. | NP. | RS. | NP. |
| Hundial collections— | | | | | | | | | | |
| 1957 | 904 | 30 | 651 | 02 | 646 | 81 | 336 | 51 | 261 | 59 |
| 1958 | 715 | 45 | 949 | 77 | 962 | 81 | 626 | 96 | 718 | 63 |
| 1959 | 528 | 05 | 938 | 65 | 327 | 79 | 243 | 58 | 195 | 76 |
| 1960 | 1,738 | 80 | 2,477 | 21 | 1,447 | 40 | 984 | 78 | 672 | 10 |

## APPENDIX IV.

[Vide item V on page 526 supra.]

### இணைப்பு I.

[1953–4 கடைசி வரைக்கும் உள்ள கணக்கில் ஆந்திர மாநிலக் கணக்கும் சேர்ந்திருக்கிறது. 1956–7 முதல் உள்ள கணக்கு 1956 நவம்பர் 1-ம் தேதி முதல் அமுலுக்கு வந்த மாநிலங்களின் சீரமைப்பு அடிப்படையில் அமைந்தது.]

சென்னை மாநில ரெவின்யூக் கணக்கில் வருவாயும், செலவினமும்.

| தலைப்புகள். | 1938–9. | 1953–4. | 1954–5. | 1955–6. | 1956–7. | 1957–8. | 1958–9. | 1959–60. | 1960–61. திட்ட மதிப்பீடு. | 1960–61. திருத்த மதிப்பீடு. | திட்ட மதிப்பீடு, 1961–2. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) |
| (ரூபாய் லட்சத்தில்) | | | | | | | | | | | |
| அ. வருவாய். | | | | | | | | | | | |
| மத்திய ஆயத் தீர்வைகள். | .. | 2,25·44 | 1,66·49 | 1,82·56 | 1,75·14 | 3,14·43 | 5,88·53 | 6,02·51 | 6,10·00 | 6,10·00 | * |
| கார்ப்பொரேஷன் வரி நீங்கலாக இதர வருமான வரிகள்— | | | | | | | | | | | |
| வருமான வரியில் பங்கு .. .. | 22·50 | 7,50·82 | 5,67·38 | 5,59·54 | 5,23·85 | 6,16·07 | 6,36·72 | 6,66·29 | 4,37·00 | 7,31·00 | 7,31·00 |
| விவசாய வருமான வரி .. .. | .. | .. | .. | 1,41·94 | 1,12·51 | 1,29·67 | 86·55 | 1,53·49 | 1,50·00 | 1,37·00 | 1,37·00 |
| சொத்து வரி .. .. .. .. | .. | .. | 5·28 | 17·57 | 22·35 | 28·41 | 25·18 | 30·26 | 24·00 | 30·00 | 30·00 |
| இரயில்வேக் கட்டண வரி .. .. | .. | .. | .. | .. | .. | 31·07 | 70·37 | 84·43 | 82·00 | 89·00 | 89·00 |
| நில வரி— | | | | | | | | | | | |
| பாசன வருவாய் உள்பட மொத்த வருவாய். | 7,00·78 | 6,68·67 | 5,95·41 | 5,97·34 | 6,19·86 | 6,91·52 | 6,67·34 | 7,04·62 | 6,61·35 | 6,81·62 | 6,46·64 |
| ஆயத் தீர்வைகள் .. .. .. | 3,72·23 | 30·86 | 27·22 | 28·62 | 30·29 | 27·97 | 22·63 | 22·94 | 23·39 | 23·43 | 23·69 |
| முத்திரைத்தாள் .. .. .. | 1,73·37 | 3,69·23 | 2,62·47 | 3,59·56 | 3,62·76 | 3,50·00 | 3,91·81 | 4,77·80 | 4,27·63 | 4,83·22 | 4,83·22 |
| காட்டுவளம் † .. .. .. .. | 45·63 | 1,22·14 | 1,31·89 | 1,77·08 | 1,75·17 | 1,29·19 | 1,30·63 | 1,69·24 | 1,35·84 | 1,90·14 | 1,79·11 |
| பத்திரப்பதிவு .. .. .. .. | 32·70 | 90·60 | 60·46 | 69·66 | 78·85 | 79·42 | 86·26 | 1,04·51 | 87·03 | 1,02·02 | 1,02·02 |
| வாகன வரி .. .. .. .. | 81·22 | 4,17·04 | 3,59·89 | 4,00·87 | 4,37·73 | 4,54·29 | 4,99·58 | 5,49·51 | 5,30·02 | 5,91·94 | 5,93·79 |

* ரூபாய் 6,25 லட்சம் " மத்திய ஆயத் தீர்வையில் மாநிலத்தின் பங்கு " என்பதன்கீழ் காட்டப்பெற்றுள்ளது.

† இந்த தலைப்பு சம்பந்தப்பட்ட மத்திய அரசிடமிருந்து பெறும் மானியங்கள் " யூனியன் உதவி மானியங்கள் " என்பதன்கீழ் காட்டப்பெற்றுள்ளன.

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விற்பனே வரி .. .. .. .. | .. | .. | .. | .. | .. | .. | 14,76·11 | 16,74·53 | 15,85·51 | 18,02·97 | 18,62·40 |
| இதர வரிகளும் தீர்வைகளும்— | | | | | | | | | | | |
| பொது விற்பனே வரி .. .. .. | .. | 11,99·26 | 8,68·98 | 9,82·07 | 11,16·77 | 11,78·05 | * | * | * | * | * |
| இதர இனங்கள் .. .. .. | 3·19 | 1,22·08 | 2,49·35 | 2,66·40 | 2,75·61 | 3,84·67 | 2,07·50 | 2,22·20 | 2,12·60 | 2,35·33 | 2,40·33 |
| மொத்தம் .. | 3·19 | 13,21·34 | 11,18·33 | 12,48·47 | 13,92·38 | 15,62·72 | 2,07·50 | 2,22·20 | 2,12·60 | 2,35·33 | 2,40·33 |
| பாசனம்— | | | | | | | | | | | |
| நேரடி வருவாய் † .. .. .. | 6·31 | 10·64 | 6·59 | 7·22 | 9·14 | 9·57 | 10·62 | 11·08 | 8·95 | 11·50 | 11·50 |
| (கழிக்கவும்)-நடைமுறைச் செலவுகள். | — 38·39 | — 1,38·01 | — 44·32 | — 45·46 | — 57·72 | — 59·46 | — 64·57 | —78·64 | — 62·21 | — 76·84 | — 72·42 |
| நிகர வருவாய் .. | — 32·08 | — 1,27·37 | — 37·73 | — 38·24 | — 48·58 | — 49·89 | — 53·95 | — 67·56 | — 53·26 | — 65·34 | — 60·92 |
| பாசனம்— | | | | | | | | | | | |
| நேரடி வருவாய் † .. .. .. | 1·99 | 2·78 | 2·23 | 2·42 | 2·08 | 1·89 | 2·26 | 2·35 | 1·37 | 1·77 | 1·77 |
| வட்டி .. .. .. .. .. | 19·73 | 49·43 | 45·75 | 52·76 | 59·68 | 3,78·97 | 4,94·96 | 6,07·48 | 6,87·42 | 7,05·47 | 7,42·05 |
| நீதி நிர்வாகம் .. .. .. .. | 15·39 | 55·42 | 43·60 | 57·60 | 62·05 | 67·63 | 56·07 | 52·39 | 52·94 | 52·26 | 52·25 |
| சிறைச்சாலேகள் .. .. .. | 5·98 | 25·00 | 27·32 | 22·02 | 26·20 | 26·32 | 24·08 | 30·99 | 30·49 | 31·75 | 30·76 |
| காவல் .. .. .. .. .. | 5·66 | 20·64 | 22·18 | 21·41 | 21·81 | 19·14 | 22·58 | 23·82 | 20·58 | 27·70 | 24·35 |
| துறைமுகங்களும் கப்பல் வழிகாட்டலும். | 44·67 | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | .. | .. |
| கல்வி ‡ .. .. .. .. | 8·35 | 46·09 | 57·81 | 73·40 | 93·71 | 1,34·64 | 1,79·59 | 2,02·65 | 2,92·67 | 3,01·02 | 35·69 |
| மருத்துவம் ‡ .. .. .. .. | 10·25 | 26·71 | 22·13 | 27·35 | 31·14 | 61·04 | 73·90 | 83·84 | 80·69 | 1,14·85 | 61·61 |
| பொதுச் சுகாதாரம் ‡ .. .. .. | 2·59 | 5·64 | 6·05 | 22·13 | 7·17 | 19·40 | 68·05 | 1,18·50 | 1,14·60 | 1,68·42 | 12·01 |
| விவசாயம் ‡ .. .. .. .. | 3·12 | 1,27·90 | 88·14 | 80·37 | 1,04·21 | 1,01·71 | 1,62·16 | 2,33·09 | 1,96·69 | 2,10·16 | 1,94·60 |
| கால்நடைப் பராமரிப்பு ‡ .. .. | 1·02 | 7·65 | 8·69 | 7·93 | 13·08 | 19·23 | 18·27 | 23·18 | 36·87 | 38·24 | 9·95 |
| கூட்டுறவு ‡ .. .. .. .. | 4·18 | 20·85 | 43·35 | 64·53 | 1,27·82 | 1,06·47 | 72·43 | 1,25·62 | 1,09·50 | 1,94·72 | 22.33 |
| தொழில்கள் ‡ .. .. .. | 18·85 | 1,05·48 | 77·13 | 1,17·52 | 1,23·41 | 2,47·24 | 2,17·03 | 2,79·19 | 3,31·22 | ı,52·08 | 1,20·85 |
| பலவகைத் துறைகள் ‡ .. .. | 7·62 | 40·42 | 35·12 | 42·50 | 99·48 | 90·06 | 1,19·07 | 1,56·57 | 1,79·14 | 2,13·07 | 54·14 |
| சமுதாய வளர்ச்சித் திட்டம், தேசிய வீளர்ச்சித் திட்டம், ஸ்தல அபிவிருத்தி வேலேகள். ‡ | § | § | § | § | § | § | § | § | § | § | 56·51 |
| சீரியல் பணிகள் ‡ .. .. .. | 25·12 | 1,26·31 | 1,11·38 | 1,14·67 | 1,28·73 | 99·11 | 1,10·45 | 1,40·81 | 1,19·69 | 1,25·23 | 1,09·43 |
| மின்சாரத் திட்ட (மொத்த) வருவாய் .. | 42·51 | 5,31·42 | 5,97·21 | 7,03·08 | 8,13·43 | 2,54·27 | .. | .. | .. | .. | .. |
| கழிக்கவும்—(நடைமுறைச் செலவுகள்) | —24·81 | —3,63·58 | —3,71·79 | —4,52·08 | —5,26·02 | —2,20·07 | .. | .. | .. | .. | .. |
| நிகர வருவாய் .. | 17·70 | 1,67·84 | 2,25·42 | 2,51·00 | 2,87·41 | 34·20 | .. | .. | .. | .. | .. |

